*Kumaraṉ*
*Āram 8, muttu 42*
*June 18, 1931*

Record no. 313

REG. M. NO. 823. வாரப்பதிப்பு. 20 PAGES.

# குமரன்

## THE 'KUMARAN' KARAIKUDI.

ஆரம் அ. | காரைக்குடி, பிரஜோற்பத்தி-ஸு ஆனி-மீ ௪-உ வியாழக்கிழமை (18—6—31) | முத்து ௪உ.

### தென்னாட்டுக்கோவில்கள்.



குற்றாலம் மலையும்—கோவிலும்.



# குமரன் டைரிகள்,

இன்னும் சில டைரிகளே கைவசமிருக்கின்றன.

(பிரஜோற்பத்தி-ஞு)

விலை குறைக்கப்பட்டிருக்கிறது.

பெரிய டைரி ஒன்றுக்கு ரூபா 0-12-0.

சிறிய டைரி ஒன்றுக்கு ரூபா 0-6-0.

Agents:— RM. S. RM. Ramaswamy Chettiar,
No. 123, Mogul St. Rangoon.

CT. SM. Chidambaram Chettiar,
No. 14, Canal Road Teluk Anson.

மானேஜர்,

தனவைசியன் கம்பெனி லிமிடெட்,

காரைக்குடி.

# பொன்னுங்காணித் தைலம்.

## இஃது ஒன்றே உண்மையில் பொன்னுங்காணித் தைலமென்பது.

தஞ்சை சமஸ்தான முறையிற் செய்யப்பட்டது.

இத்தைலம் பற்பல மூலிகைகளினாலும் உயர்ந்த சாக்குகளாலும் ஆயுர்வேத முறைப்படி தயாரிக்கப்பட்டது.

இது குணத்திற் சிறந்தது.
ஒரு முறை வாங்கி உபயோகிக்கின் குணம் நன்கு விளங்கும்.

நமது பொன்னுங்காணித் தைலத்தால் தீரும் வியாதிகள்.

சிரசிற் சுண்டுவிழுதல், மயிர் உதிர்தல், கண்களிலேற்படும் மங்கல், எரிச்சல், புகைச்சல், நீர்வடிதல், தலைபாரம், மயக்கம், பீனசம் காதில் ஏற்படும் குத்தல், குடைச்சல், சீழ்வடிதல், திரேகத்திலேற்படும் தேமல், சொரி, சிரங்கு, கற்றாழை நாற்றம், வெட்டைச்சூடு, நீர்க்குத்தல். நீரொறிவு, கைகால்க் கடுப்பு, மூட்டுகளின் பிடிப்பு முதலான அநேக வியாதிகளைச் சொஸ்தப்படுத்தும்.

இத்தைலம் 15 வருஷகாலமாகத் தயாரிக்கப்பட்டு உள்நாடுகளிலும் பினாங்கு சிங்கப்பூரென்னும் வெளிநாடுகளிலும் நண்பர்களுக்கு அனுப்பப்பட்டு உபயோகித்து வருவதில் நற்சாக்ஷிப்பத்திரங்களும் கிடைத்திருக்கின்றன. வாஸ்லையனுக்கு பதிலாக இத் தைலத்தையே உபயோகிக்கின் மேற்கண்ட வியாதிகளை சொஸ்தப்படுத்துமென்பதற் கையமில்லை.

ஆகலின் மிக்க குணம்வாய்ந்த இத் தைலத்தை நண்பர்கள் வாங்கி யனுபவித்து நமது நாட்டு வைத்திய முறைவய ஆதரிக்குமாறு கேட்டுக்கொள்ளுகிறேன்.

தாதுபுஷ்டிக்கு வேண்டிய சாலாமிசிரி லேகியமும் கிடைக்கும்.

## விலை விபரம்.

| | | |
|---|---|---|
| 18-பலம் கொண்ட டின் | .... ரூ. | 5—0—0 |
| சாலாமிசிரி லேகியம் சேர் 1-க்கு | .... ரூ. | 5—0—0 |

தபாற் செலவு வேறு.
வெளிநாடுகளுக்கு முன்பணம் அனுப்பவேண்டும்.

கிடைக்குமிடம்:—
**வீ. ஆறுமுகம் பிள்ளை,**
மருந்துக்கடை,
கீழச்சத்திரம் சமீபம், காரைக்குடி.

இங்ஙனம்,
**மு. க. வடிவேல் முதலியார்,**
கேட்டிவ் டாக்டர், கண்டனூர்,
ராமநாதபுரம் ஜில்லா.

இந்தியாவில் பெரியதும், ஏனைய கம்பெனிகளைவிட மூலதனம் மிகுதியானதுமாயுள்ள

ஜெனரல் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனியாகிய

# "நியூ இந்தியா"

வில் இன்ஷியூர் செய்யுங்கள்.

ஆயுள் இன்ஷ்யூரன்ஸ், கட்டடங்கள், சரக்குகளுக்கு தீ விபத்தினால் நேரும், இன்ஷ்யூரன்ஸ், ஏற்றுமதி இறக்குமதியில் சரக்குகளுக்கு இன்ஷ்யூரன்ஸ் மோட்டார்கார் முதலிய இன்ஷ்யூரன்ஸ்களை இக் கம்பெனியார் குறைந்த விகிதத்தில் செய்கிறார்கள்.

## ஆயுள் இன்ஷ்யூரன்ஸ்.

வேலை ஆரம்பித்த இரண்டு வருஷங்களுக்குள்ளாக ஒரு கோடியே 55 லக்ஷத்துக்கு புரோபோசல்கள் பெற்று 1 கோடியே 10 லட்சம் பெறுமான லைப் பாலிஸிகளைப் பூர்த்தி செய்து இந்தியாவில் ஏற்கனவேயுள்ள எல்லா லைப் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனிகளையும் நியூ இந்தியா தோற்கடித்துவிட்டது.

எமது வரவு செலவு திட்டத்துக்கெழுதித் தருவித்து எம்மிடம் இன்ஷியூர் செய்வதால் உங்களுக்கு ஏற்படும் ஏராளமான பாதுகாப்பை நீங்களே காணுங்கள்.

**D. V. ARUNACHALAN,**
ஜெனரல் ஏஜண்ட், தேவகோட்டை.

**K. K. ஸ்ரீநிவாசன்,**
பிராஞ்சு மானேஜர், 4/5 முதல் லைன் பீச், சென்னை.

வாரப் பதிப்பு.

சந்தா விவரம்.

உள்நாடு வருஷம் ஒன்றுக்கு ரூ. 5-0-0
ஆறு மாதம் 3-0-0
வெளிநாடு வருஷம் ஒன்றுக்கு ரூ. 6-0-0



# குமரன்

"என் கடன் பணிசெய்து கிடப்பதே".

மாதப் பதிப்பு.

சந்தா விவரம்.

உள்நாடு வருஷம் ஒன்றுக்கு ரூ. 0-12-0
வெளிநாடு வருஷம் ஒன்றுக்கு 1-0-0
வருஷம் ஆடி மீ ஆரம்பம்.


எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பதறிவு.

எண்ணிய எண்ணியாங் கெய்துப எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்.

## பொறுக்குமணிகள்.

இங்கிலாந்து போஸ்டாபீசுகள் ஸ்டாம்புகள் விற்கின்ற இயந்திரங்கள் 2600 ஐ கையாளுகின்றன.

0 0 0

இங்கிலாந்தில் மொத்தம் 34350 இயந்திர டெலிபோன் ஆபீசுகளும் 10040 சாதாரண ஆபீசுகளும் இருக்கின்றன.

0 0 0

சமீபத்தில் செய்யப்பட்டிருக்கிற ஓர் விதமான நெருப்புக் குச்சி பெட்டியிலிருந்து வெளியே எடுக்கும்போதே தீப்பற்றிக் கொள்கின்றதாம்.

0 0 0

சென்றவருஷம் பிரிட்டனில் சாராய வகைகளுக்காக தலைக்கு 6 பவுன் 4 ஷில்லிங் விகிதம் செலவிடப்பட்டிருக்கின்றது. அதற்கு முந்திய வருஷம் தலா 6 பவுன், 9 ஷில்லிங் 6 பென்ஸ் செலவாயிற்றும்.

0 0 0

கடந்த ஜனவரி கடைசியில் 526 தனி டெலிபோன் செய்திகளும் 4293 உத்தியோகஸ்தர்களால் அனுப்பப்பட்ட டெலிபோன் செய்திகளும் அனுப்பப்பட்டிருக்கின்றன. அவற்றிற்கு மொத்தம் கொடுக்கப்பட்ட தொகை 1246000 பவுனும்.

0 0 0

பிரிட்டனிலுள்ள பிரயாணிகளைப் பற்றிப் பேசுங் காலையில் லார்டு பிரிவிசில் காமன்ஸ் சபையில், பிரான்ஸைப் போய்ப்பார்ப்பவர்கள் வருஷத்தில் 10 கோடி பவுன் முதல் 12 கோடி பவுன் வரையிலும் செலவிடுகின்றார்களென்று குறிப்பிட்டார்.

0 0 0

மனிதன் வேலைசெய்யும் போது எவ்வளவு முயற்சியுடன் செய்கின்றான் என்பதையும் வேலை செய்த பிறகு எவ்வளவு தளர்ச்சியுற்றிருக்கின்றானென்பதையும் அளக்கின்ற ஓர் கருவியைக் கண்டு பிடித்திருக்கின்றார்கள்.

0 0 0

1880 வருஷத்தில் கிரேட்பிரிட்டனில் தயார் செய்யப்பட்டதும் 197000000 பவுன் விலைபெறுமான முள்ளதுமான சாமான்கள் ஏற்றுமதி செய்யப்பட்டன. 1913 வருஷம் ஏற்றுமதி செய்யப்பட்ட சாமான்களின் விலை 417000,000 பவுன் சென்ற வருஷம் ஏற்றுமதி செய்யப்பட்ட சாமான்களின் விலை 448000,000 பவுன்.

0 0 0

பிரான்ஸில் ஒருவர் சிகரட் பற்ற வைப்பதற்கும் அதன் சாம்பலை தட்டுவதற்கும் டெலிபோன்போல் ஒரு சிறு விசித்திரக் கருவியை கண்டு பிடித்திருக்கிறார். அதில் ஒரு போனைக் குழற்றினல் தீப்பிடிக்கும்; அதனை ஓர் ஸ்தானத்தில் வைத்துவிட்டால் அணைந்துவிடும். அந்த இயந்திரத்தில் கரியை தட்டிவைக்கும் தட்டு முகம் பார்க்குங் கண்ணாடி ஆகியவை அமைந்திருக்கின்றன.

## கல்யாணச் சந்தை.




கிழவர் கையில் பணம் அதிகமாக இருக்கிறது. வாலிபர்கள் கையில் பணம் கொஞ்சமாக இருக்கிறது. ஆனால் மார்க்கெட்டிலோ 30 ஆயிரத்துக்குக்குறையப் பெண்கிடையாது.

தென்னமெரிக்காவிலுள்ள ஓர்வித முள்ளெலி பகைவரைக் கண்டால் ஐந்து நிமிஷத்திற்குள் குழிதோண்டி பூமிக்குள் மறைந்துவிடுகின்றதாம்.

0 0 0

சஹாரா பாலைவனத்தில் கடல் தண்ணீரை இயந்திரம் மூலம் இறைத்து பயிர் செய்யும் முயற்சி நடைபெற்று வருகிறது.

0 0 0

சீனாவுக்கும் ருஷியாவுக்கு மிடையிலுள்ள ஆல்டாய் மலைகளில் ரப்பர் எடுக்கத் தகுந்த ஓர்வித செடிகள் வளர்கின்றன.

0 0 0

கிரேட் பிரிட்டனில் சுமார் 4534 சாதாரண உடைதரித்த போலீசாரிருக்கின்றனர். அவர்களில் 2892 பேர்கள் துப்பறியும் வேலையி லீடுபட்டிருக்கின்றனர்.

0 0 0

சுவரொட்டிக் காகிதங்களில் அழுக்குப் படியும் போது "ஒட்மீல்" இல் ஒரு கம்பளியை நனைத்துத் துடைத்தால் சுத்தமாகி விடும்.

0 0 0

சூரிய னுதயமாகி அஸ்தமனமாகிறதுவரையிலும் தனது இலைகளை இரண்டிரண்டாகச் சேர்த்து தொழுதுகொண்டிருக்கின்ற ஓர்விதச் செடி மலையாளத்து மலைகளில் காணப்படுகின்றன. இதனை "தொழுகண்ணி" என்று தமிழர்கள் பெயரிடுகின்றனர்.

0

கடல் வாழ் ஜந்துக்களில் பறக்கும் மீன்களிருப்பதாகச் சொல்லப்படுகிறது. இது தவறான செய்தியாம். ஏனெனில் மீன்களுக்குப் பறக்கும் சக்தியிருப்பதில்லை; ஆனால் வாலின் சக்தியால் தண்ணீர் மட்டத்துக்கு மேலே இருபது இருபத்தி ஐந்து அடி உயரம்வரைப் போகின்ற சக்தியிருக்கிறது. இதனைக் கண்டுதான் மீன்பறப்பதாக நினைக்கின்றார்கள் போலும்.

ரத்தின கம்பளங்களை தரையில் பரப்பும் போது தரையில் டர்பண்டைனை தடவினால் பூச்சிகள் மொய்க்க மாட்டா

0 0 0

தெற்கு பெஸ்ஸாராபியாவை அழித்துவருகின்ற விட்டில் பூச்சிகளை இல்லாமற் செய்யும்பொருட்டு 15000- உழவர்கள் அடங்கிய ஒரு பெரிய சேனை அனுப்பப்பட்டிருக்கிறது.

0 0 0

எகிப்து தேசத்தில் ஒரு காலத்தில் தமிழர்களுடைய ஆதிக்கம் இருந்து வந்ததாகவும் அவர்களுடைய நாகரிகம் பாவி கடவுள் வழிபாடு பழக்க ஒழுக்கம் ஆகியவற்றை பரப்பியதாகவும் தெரிகிறது.

0 0 0

அமெரிக்காவிலுள்ள வெஸ்டரிங் ஹவுஸ் மின்சார கைத்தொழிற் சாலைக் கம்பனியார் கண்டு பிடித்திருக்கும் "இயந்திர மனிதன்" உடலிலமைத்திருக்கும் டெலிபோன் மூலம் நாமிடுகின்ற கட்டளைகளை ஒழுங்காகச் செய்து வருகின்றான்.

0 0 0

அமெரிக்காவில் புதிதாக பிட்ஸ்பர்க் சர்வ கலாசாலைக்காக 42 மாடியுள்ள ஓர் பெரிய கட்டிடம் அமைக்கப்பட்டிருக்கின்றது. உலகில் சர்வ கலாசாலைக்காகக் கட்டப்பட்ட கட்டிடங்களில் மிகப் பெரிது இதுவே. எல்லா வகுப்புகளும் இக்கட்டிடத்தில் நடத்தப்படுமாம்.

0 0 0

லண்டனிலுள்ள ரீஜண்டு பார்க்கில் ஓர் பெரிய புத்தக்கோவில் இருக்கின்றது. இதில் ஐரோப்பாமுழுதும் புத்த மதப்பிரசாரம் செய்துவருகின்ற வஜிரநானு என்பவர் தினசரி புத்த மதப்பிரசங்கம் செய்துவருகிறார். 400 முதல் 500 வரை ஜனங்கள் சென்று அவர் பிரசங்கத்தைக் கேட்டுவருகின்றார்களாம்.

## விகடப்பகுதி.

ஒரு சிறு பையன் தனது சட்டையின் முற்புறம் முதுகில் வருவாறு மாடிக்கொண்டான். தாயார் அதனைக் கண்டு:— அடே! ஏன் இப்படி முற்புறம் பின்வரும்படிசட்டையைமாட்டியிருக்கின்றாய்?

பையன்:— தவறொன்று மில்லை. நான் திரும்பும்போது எல்லாம் சரியாகிவிடும்.

0 0 0

ஒரு நல்ல ஆர்மோனியம் வாங்கிக் கொடுத்துவிட்டதாகப் பெருமை பாராட்டிய ஒருவரைப் பார்த்து

கோவிந்தன்:—மாமா நீங்கள் வாங்கிக் கொடுத்த ஆர்மோனியம் மிகவும் ராசியானது.

மாமா:— ஏன்? எப்படித் தெரிகிறது?

கோவிந்தன்:— தாயார் அதனை வாசியாம லிருந்தால் தினசரி 4 அணா தருவதாகச் சொல்லி அப்படியே கொடுத்து வருகிறார்.

0 0 0

நன்றாக நாடகம் நடித்ததாயெண்ணிக் கொண்டிருந்த ஓர் நாடகக் கம்பனியார் தங்களுக்குள்ள வருவாயை உயர்த்த வேண்டுமென்று கேட்டுக் கொண்ட போது மானேஜர் "அன்புடையீர், தாங்கள் நேற்று நடித்த நாடகத்தைக் கண்டு பலர் என்னிடம் இக்கம்பனியாரைப் போகச் சொல்ல வேண்டும்; இன்றேல் எங்கள் பெயரை "ப்ரீ" லிஸ்டிலிருந்து எடுத்துவிட வேண்டுமென்று எழுதியிருக்கிறார்கள்" என்றெழுதினர்.

0 0 0

"நான் நேற்றிரவு சாராயம் குடித்திருந்தேன் என்று எப்படித் தெரிந்தது?"

"நீ நேற்று அந்த நாற்காலியிடம் நடக்கும்படிக் கட்டளையிட்டாயன்றோ?"

0 0 0

"முத்தம் கொடுப்பதில் உனது நோக்க மென்ன?

"நான் நோக்குவதே யில்லை. முத்தம் கொடுக்கும் போது கண்ணை அடைத்துக் கொள்கின்றேன்."

0 0 0

செட்டியார் மனைவியைப் பார்த்து:— வள்ளி! அதோபார். சிவன் கோவி லூரணியில் ஒரு பன்றி கிடந்து புரளுகிறது. காவற்காரன் எங்கே? என்று கூறிக்கொண்டே "மெய்யா! அடா மெய்யா" என்றுகூப்பிட்டார்

வள்ளி:— வேண்டாம். வேண்டாம். கூப்பிட வேண்டாம். அங்கு புரளுவது பன்றியல்ல. என்னுடைய தாய் குளிக்கிறாள்.

0 0 0

"அந்த மாஜிஸ்திரேட்:- என்னிடம் வயதென்னவென்று கேட்டபோது எனக்கு சரியாக வயது இருபத்தி நாலா அல்லது இருபத்தி ஐந்தாவென்பது ஞாபகமில்லை".

"ஆக்லே, என்ன சொன்னாய்?"

"பதினெட்டு" என்று சொல்லி விட்டேன்."

# பர்மா நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் சங்கம்.

1930 ஆம் வருடம் அக்டோபர் மாதம் 30உ யன்று விவசாயிகளின் மகாநாடொன்று ஊலான் தெய்ன் அவர்களின் தலைமையில் கூடி பல தீர்மானங்கள் நிறைவேற்றியது. அதில் 13-வது தீர்மானம் பின் வருமாறு:—

"இந்த வருடத்தில் மற்ற வருடங்களைவிட விளைபொருள்களின் விலைவாசிகள் மிக மோசமாகக் குறைந்திருப்பதால் பணக்கஷ்டம் ஏற்பட்டிருக்கிறது. மக்குவே ஜில்லாவில் வதியும் வியாபாரிகள் விவசாயிகட்குக் கடன் கொடுத்திருக்கும் தொகையை, நெல் விலை பயறுவிலை சுமாராக கிடைக்கும் வரைப் பொறுத்துக் கேட்கவும், இவ்வருடத்திற்கு மட்டும் இரக்கம் காட்ட முடிந்த அளவு காட்டவும், மக்குவே ஜில்லா செட்டியார்களைக் கேட்கும்படியும், தகுந்தவிலை விளைபொருள்களுக்குக் கிடைக்கும் பொருட்டு சரக்குகளை அடமானம் பிடித்து பண ஒத்தாசை புரியவும் சரக்குகளை வாங்கிக்கட்டி வைக்கச் சாத்தியப்படும் முறையில் சகாயமான வட்டிக்குக் கடன் கொடுத்துதவும் படியாகவும், பர்மா நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் சங்கம் மக்குவே ஜில்லா செட்டியார்கட்கு அறிவித்துத் தகுந்த ஏற்பாடு செய்து கொடுக்கும்படி வற்புறுத்துகிறது"

இத்தீர்மானங்களின் நகலொன்றை நமது சங்கத்திற்கனுப்பி வதை விவசாயிகளுக்கு உடனே உதவி செய்ய வேணுமென்று டிசம்பர் மாதக் கடைசியில் எழுதியிருந்தார்கள்.

இவ்விஷயங்களையெல்லாம் மக்குவே ஜில்லாவிலுள்ள நமது அங்கத்தினர்களுக்கெல்லாம் அறிவித்து அவர்களது அபிப்பிராயத்திற்கிணங்க பெப்ரவரி மாதத்தில் ஊலான் தெய்ன் அவர்களுக்குப் பின்வருமாறு பதிலளிக்கப்பெற்றது:—

மக்குவே ஜில்லா செட்டியார்களிடமிருந்துவந்த தகவல்களிலிருந்து விவசாயிகளிடம் வாவேண்டிய பாக்கிகளை வசூல் செய்வதில் செட்டியார்கள் தாராள சிந்தையுடன் நடந்து கொள்வதாகவே அறிகிறோம். ஓர் நியாயமான காலம் வரையிலும் நியாயமாக அதிகவிலை கிடைக்கும் வரையிலும் தங்கள் மகசூலை வைத்துக்கொள்ள வேணுமென்று ஆசாமிக்காரர்கள் விரும்பினால், செட்டியார்கள் எப்பொழுதுமே அநுதாபமுள்ளவர்களாகவே இருந்து வந்திருக்கிறார்கள். இனியும் அவ்விதமே இருப்பார்கள். ஆதிகாலந் தொட்டு செட்டியார்கள் விவசாயிகளின் உண்மையான நண்பர்களாக இருந்துள்ளார்கள். பொருளியலில் கஷ்டம் ஏற்பட்டிருக்கிற இக்காலத்தில் இயற்கையாகவே தங்கள் தங்கள் சக்திக்கு எட்டியவரையில் தங்கள் ஆசாமிகட்கு உதவியாய் இருப்பதற்கு உண்மையிலேயே விரும்புகிறார்கள்.

குடிசைக் கைத்தொழில்களுக்கு ஆதரவு அளிப்பதற்கும் விவசாயிகளிடையே செட்டாக வாழவேண்டுமென்ற எண்ணங்களைப் பரப்புதற்கும் தீவிரமான முயற்சிகள் செய்யவேண்டுமென்று தங்கள் சபையார்க்கு யோசனை கூற விரும்புகிறோம்.

### மத்திய சிக்கனக்கமிட்டியின் கடிதம்.

ஜனவரி மாதத்தில் மத்திய சிக்கனக் கமிட்டியாரிடமிருந்து நமது சங்கத்திற்கு ஓர் கடிதம் வந்தது. அதில் ஜனவரிமாதம் 4உ யன்று அகில பர்மா பொதுக்கூட்டமொன்று நடந்ததென்றும் அதை பர்மிய அரிசிமில்காரர்கள், விவசாயிகள், தரகர்கள், நிலச்சுவான்தார்கள் கூட்டினார்களென்றும் அக் கூட்டத்திற்கு 19 ஜில்லாக்களிலிருந்து பிரதிநிதிகள் வந்திருந்தார்களென்றும் குறிப்பிடப்பெற்றிருந்தது.

அக்கூட்டத்தில் நிறைவேறிய தீர்மானங்களில் ஒன்றாவது:—"நெல்லை விற்காமல் வைத்துக்கொள்வதற்காக ஒவ்வொரு ஊரிலும் உள்ள யூனியன்கள் மறியல்செய்பவர்களை நியமிக்கும்படி இப்பொதுக் கூட்டம் யோசனை கூறுகிறது. நெல் வைத்திருப்பவர்களிடமிருந்து தங்கள் பாக்கிகளை திருப்பித்தருமாறு நெருக்கிக் கேட்காமலிருக்கும்படி பர்மியர் செட்டியார் லேவாதேவிக்காரர்களையும் சிறப்பாக நாட்டுக்கோட்டைச் செட்டியார் சங்கத்தையும் இக் கூட்டம் கேட்டுக் கொள்கிறது.

## சங்கம் செய்து வரும் அரியவேலைகள்.

### பர்மாவின் பொருளாதார நிலை.

#### ஏழைகட்கு அவர்கள் செய்யுமுதவி.

மேற்கண்ட தீர்மானத்தை நமக்கனுப்பியதோடு நெல் விலை 160 வரும்வரையில் வைத்துக் கொண்டிருப்பதற்குத் தீர்மானித்ததாகவும் அப்படி வைத்துக் கொண்டிருப்பதற்குச் செட்டியார், பர்மிய லேவா தேவிக்காரர்கள் கடன் பாக்கிகளுக்காக ஜனவரி மாதத்திலிருந்து மே மாதம் முடிய நெருக்கக் கூடாதென்றும் ஜில்லாக்களில் கூடிய கூட்டங்களில் செட்டியார் லேவாதேவிக்காரர்களும் தருவிக்கப்பட்டதாகவும் அவர்கள் நெல்லை வைத்துப் பொறுத்துப்பார்க்கிற எண்ணத்திற்கு ஆதரவு அளித்ததாகவும் இவ்விஷயத்தில் தங்கள் சக்திக்கியன்றவரை எல்லா உதவியும் செய்யத் தயாராய் இருப்பதாகச் சொன்னதாகவும் மற்றும் இச் சங்கத்தோடு கலந்துகொள்ளும்படி அவர்கள் யோசனை கூறியதாகவும் அக்கடிதத்தில் சொல்லப்பட்டிருந்தது. மற்றும் கடன்களை நெருக்கிக் கேட்காமலிருக்கும்படி நமது அங்கத்தினர்களை இச் சங்கத்திலிருந்து உடனே கேட்டுக்கொள்ளும்படி சொல்லியிருந்ததோடு செட்டியார்கள் நலன்களும் விவசாயிகள் நலன்களும் ஒன்றாய் இருப்பதாகவும் ஆதலால் பிற்காலத்தில் இரு வகுப்பாருடைய நலன்களுக்காகவும் சேர்ந்து வேலை செய்ய வேண்டுமென்றும் எழுதியிருந்தார்கள்.

அதற்குப் பின்வரும் பதிலை பெப்ரவரி மாதத்தில் அளித்திருந்தோம்:—

செட்டியார்கள் இந்நாள் பரியந்தம் தங்கள் ஆசாமிகள் ஸ்டாக் செய்து வைத்திருக்கும் நெல்களுக்கு நல்ல விலை கிடைப்பதற்கு எப்பொழுதும் உதவி செய்து வந்துள்ளார்கள். பொருளியல் கஷ்டம் ஏற்பட்டிருக்கும் இக்காலத்தில் நெல் வைத்திருப்பவர்களிடமிருந்து கடன்களை வசூலிப்பதில் தாராள சிந்தையுடன் நடந்துகொள்ளவே செட்டியார்கள் விரும்புகிறார்கள். பர்மாவின் பல பாகங்களிலிருந்து எங்களுக்குக் கிடைத்திருக்கும் தகவல்களிலிருந்து ஓர் நியாயமான காலத்திற்கு நியாயமாக நல்லவிலை கிடைக்கும் வரையில் தங்கள் நெல்லை வைத்துப் பார்க்கவேண்டுமென்று சொல்லுகிற ஆசாமிக்காரர்கள் நோக்கத்திற்கு எங்குமே செட்டியார்கள் அநுதாபமுள்ளவர்களாய் இருப்பதாக அறிகிறோம். பணமார்க்கெட்டின் பிரியம் சவுதங்களைச் சமாளித்துக் கொள்வதற்கு தனித்தனியாக சக்தி இருக்கும் வரையிலும் அவர்களது ஆசாமிகள் அவர்களை தவறான நிலையில் கொண்டுபோய் வைத்துவிடாத வரையிலும் (அதாவது நெல் இருக்கிறது இருக்கிறது என்று சொல்லி ஏமாற்றிவிடுகிறது) செட்டியார்கள் தங்கள் கடன்களுக்காக நெருக்கமாட்டார்கள்.

ரங்கூனில் 160 விலை வரும்வரையில் நெல்லை விற்காமல் வைத்துக் கொண்டிருப்பது என்று தீர்மானிப்பதுபற்றி எங்கள் கருத்தையும் வெளியிட வேண்டியவர்களாக இருக்கிறோம். ஏதாவது ஒரு மந்திர சக்தியினால் 160 விலை கிடைத்துவிட்டால் செட்டியார்களைப்போல் வேறு யாரும் சந்தோஷப்படமாட்டார்கள். அதனால் விவசாயிகள் வெகுநாள் காத்துக்கொண்டிருந்தாலும் பரவாயில்லை. துரதிர்ஷ்டமாக பர்மாவிற்கு ஆஸ்திரேலியாவிலிருந்து கோதுமை இறக்குமதி செய்கிறார்கள். இந்தியாவில் தங்களுடைய பழைய அரிசியை இறக்குமதி செய்வதற்கு ஜப்பானியர் முயற்சிப்பதாக அறிகிறோம். ஜப்பானியர்கள் நம்முடைய அரிசி வாங்கிய காலம் போக இப்பொழுது நம்முடன் போட்டி போட வந்திருக்கிறார்கள். ஆதலால் தொடர்ந்து சில மாதங்களுக்குப் பர்மா பூராவும் நெல் விற்பனை செய்வதில்லையென்று வைத்துவிட்டால் நம்மிடத்தில் தற்சமயம் வியாபாரம் செய்துகொண்டிருக்கிற மார்க்கெட்டுகளையும் இழந்துவிடுவோம். உலக நிலையைக் கவனிக்குங் காலத்து கோதுமையும் அரிசியும் யதேஷ்டமாக விளைந்திருப்பதால் நாம் எதிர்பாராத சம்பவங்கள் நேரிட்டாலொழிய தாங்கள் தீர்மானித்துள்ள விலை நமக்குக் கிடைக்குமென்று நம்பவில்லை. ஒரு நெல் விடாமல் தற்சமயம் உள்ள விலைக்கு விற்றுவிடவேண்டுமென்று நாங்கள் சொல்லவில்லை. ஆனால் உள்ள நிலையை மிகவும் கவனித்து நடக்க வேண்டுமென்றுதான் சொல்லுகிறோம். இந்த ஆபத்தான காலத்தில் ஏதாவது தவறுதலாக நடந்துகொண்டால் நாம் விரும்பாத நிலைக்கு தேசத்தைக் கொண்டுபோய் விடும்.

மறியலின் பேரால் பல இடங்களில் இம்சை செய்யப்படுவதை ஆழ்ந்து கவனிக்கும்படி கோருகிறோம். ஜூபிலிஹால் கூட்டத்தை கூட்டியவர்களுக்கு இவ்விதமான இம்சை முறையைக் கையாளவேண்டுமென்ற கருத்து இராதென்றுதான் நம்புகிறோம். ஏனெனில், யாருடைய நன்மைக்காக இவ்வேலைகளெல்லாம் செய்யப்படுகிறதோ அவர்களுடைய அனுதாபத்தை இம்முறைகளால் இழக்க நேரிடும். ஆதலால், தாங்கள் இவ்விதநடத்தைகளைத் தங்களால் முடிந்தவரையில் தடுக்கவேண்டும். செட்டியார்களுக்கும் விவசாயிகளுக்கும் பிரிக்க முடியாத பொருளியல் பிணைப்பு இருக்கிறதென்பதை நாங்கள் உணருகிறோம். விவசாயிகளின் நலன்களும் எங்களின் நலன்களும் ஒன்றே என அறிகிறோம். ஆதலால், பொது ஜனங்களுடைய பொருளியல் நிலையை செம்மைப்படுத்துவதற்காக இத்தேசத்தில் செய்யப்படும் எல்லாவித முயற்சிகளிலும் நாங்கள் ஒத்துழைக்கத் தயாராக இருக்கிறோம்.

### வருமானவரி உயர்வுக்கு எதிர்ப்பு.

இந்திய சட்டசபையில் மிக அதிகமான வருமானவரி விகிதங்களை ஸர் ஜார்ஜ் ஸஷ்டர் அவர்கள் பிரேரணை கொண்டுவந்ததை யறிந்து மார்ச்சு மாதம் 10உ யன்று கீழ்கண்ட தந்தியை பர்மா அங்கத்தினர்களுக்கும் கட்சித்தலைவர்களுக்கும் பொக்கிஷ மந்திரிக்கும் கொடுத்திருந்தோம்:—"பர்மாவில் வசூலாகிறதில் ஐந்தில் ஒருபாகமாகிய ஏறக்குறைய 40 லட்ச ரூபாயை வருமான வரியாகவும் சூப்பர் டாக்ஸாகவும் கொடுக்கிற ஏறக்குறைய 1400 லேவாதேவிக்கடைகளை அங்கத்தினர்களாகக்கொண்ட பர்மா நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் சங்கத்துக் கமிட்டியார் வருமானவரிகளை மிக அதிகமாக உயர்த்தப்படும் யோசனைகளைக் கேட்டு பெரும்பீதி யடைகிறார்கள். இந்த வியாபார மந்தகாலத்தில் வரிகளில் எவ்விதமான உயர்வு செய்வதையும் சிறப்பாக பதினாயிர ரூபாய்க்குக் கீழே வரிகளைக் கூட்டுவதையும் சூப்பர் டாக்ஸ் லிமிட்டைக் குறைப்பதையும் கமிட்டியார் மிக அழுத்தமாகக் கண்டிக்கிறார்கள். இப்பொழுது வருமானவரிச்சட்டம் தயார் செய்திருக்கும் முறையும் அதை உத்தியோகஸ்தர்கள் அமுலிற்குக் கொண்டுவந்திருக்கும் முறைகளும் மிகக்கடுமையாகவும் தயவு தாட்சண்யம் அற்றதாகவும் இருக்கிறது. இங்கிலாந்தைப்போல தனியான அப்பீல் அதிகாரிகள் நியமிக்கும்படியாகவும் 23 (4) வது செக்ஷன் கீழ் விதிக்கப்பட்ட வரிகளுக்கு அப்பீல் செய்வதற்கு அனுமதிக்கும் படியும் பர்மா செட்டியார்கள் வேண்டிக் கொள்கிறார்கள். சட்ட சம்மந்தமான தவறு செய்துவிட்டதாக ஏதாவது சாக்குப்போக்கு வைத்துக்கொண்டு 23 (4) வது செக்ஷன் கீழ் வரிகள் விதிக்கப்படுகின்றன. சங்கம்."

### வருமான வரி விகிதங்கள்.

புது வருமானவரிவிகிதங்களை இந்தியன் பைனன்ஸ் ஆக்டில் வெளியிட்டிருக்கிறார்கள். அதனை அங்கத்தினர்கள் சௌகர்யத்திற்காக இங்குஎடுத்தெழுதுகிறோம். 1931 ஆம் வருஷம் ஏப்ரல் மீ முதற்தேதியிலிருந்து ஆரம்பமாகும் வருடத்திற்கு கீழ்கண்ட பிரகாரம் வருமானவரி வாங்கப் பெறும்:—

அ. தனி நபர், இந்து அவிபக்த குடும்பம், ரிஜிஸ்தர் ஆகாத கடை, ரிஜிஸ்தர் செய்யப்பட்ட கடை அல்லது கம்பெனி அல்லாத கூட்டு அமைப்பு, இவைகளுக்கு (1) மொத்தவருமானம் 2000 ரூபாய்க்கு குறைந்த காலத்து வரி யில்லை.

| | முதல் | க்கு கீழே | ரூபாய்க்கு |
|---|---|---|---|
| (2) | 2000 | 5000 | 0—0—6 |
| (3) | 5000 | 10000 | 0—0—9 |
| (3) | 10000 | 15000 | 0—1—0 |
| (5) | 15000 | 20000 | 0—1—4 |
| (6) | 20000 | 30000 | 0—1—7 |
| (7) | 30000 | 40000 | 0—1 11 |
| (8) | 40000 | 100000 | 0—2—1 |

(9) லட்சமும் அதற்கு மேற்கொண்டும் கம்பெனியாகவோ, ரிஜிஸ்தர் செய்த கடையாகவோ யிருந்தால் மொத்த வருமானம் எதுவானாலும் ரூபாய்க்கு 0—2—2

### சூப்பர் டாக்ஸ் விகிதங்கள்,—

(1) கம்பெனிகளுக்கு 50000 ரூபாய்க்கு மேல் ரூபாய்க்கு 0—1—0

(2) ஏ. ஒவ்வொரு இந்து அவிபக்த குடும்ப விஷயத்திலும் 75000 ரூபாய்க்கு மேல் லட்ச ரூபாய் வரையில் ரூபாய்க்கு 0—1—3

பி. தனி நபர், ரிஜிஸ்தர் ஆகாத கடை, ரிஜிஸ்தரான கடை அல்லது கம்பெனி அல்லாத இதர கூட்டு அமைப்பு இவைகளுக்கு 30000 ரூபாய்க்கு மேல் 50000 ரூபாய் வரையில் ரூபாய்க்கு 0—0—9

(1) அதற்குமேல் லட்ச ரூபாய் வரையில் 0—1—3

ஸி. ஒவ்வொரு தனி நபர், இந்து அவிபக்த குடும்பம் ரிஜிஸ்தர் ஆகாத கடை, ரிஜிஸ்தரான கடை அல்லது கம்பெனி அல்லாத கூட்டு அமைப்பு இவைகளுக்கு மேற்கொண்டு ஒவ்வொரு ஐம்பதினாயிரத்திற்கும் அரையணா வீதம் கூட்டிக்கொண்டு போய் கடைசியாக 0-6-3 வரை சூப்பர் டாக்ஸ் வாங்கப்பெறுகிறது.

### வருமானவரி திருத்தச் சட்டம்.

இந்தியா சட்டசபையில் மார்ச்சுமாதத்தில் ஸர். ஜார்ஜ் ஸஷ்டர் அவர்கள் வருமான வரிச் சட்டத்தைத் திருத்தவேணுமென்று ஓர் சட்டம் கொண்டுவந்தார்கள். அதன்பிரகாரம் பிரிட்டிஷ் இந்தியாவில் உள்ளவர்களுக்கு வெளிநாட்டிலிருந்து வரும் வருமானத்திற்கும் வரி விதிக்கப் பெறும். அந்த மசோதாவை அந்தக் கூட்டத்திலேயே சட்டமாக்கவேண்டுமென்றும் பொக்கிஷ மந்திரிவாகள் சொன்னார்கள். சட்டசபையில் ஒத்துக் கொண்டால் அதை 1930-ம் வருடத்திலிருந்து அமுலிற்குக் கொண்டுவர விரும்புவதாகவும் சொன்னார். இதனை அறிந்தும் கீழ்க்கண்ட தந்தியை பர்மா அங்கத்தினர்களுக்கும் கட்சித் தலைவர்களுக்கும் கொடுத்திருந்தோம்:—

"வருமான வரி திருத்த மசோதாவைக் கொண்டுவரப் போவதாகவே சென்ற வாரம்வரையில் வெளியில் தெரியவில்லை. பொது ஜனங்கள் அதனைப்பற்றி ஆலோசிப்பதற்கு சந்தர்ப்பம் இல்லை. மேற்கொண்டு சர்க்காருக்கு வரி தேவைதிலேயே பொக்கிஷ மந்திரிக்கு பூரா எண்ணம் இருப்பதாகத் தெரிகிறது. அம்மசோதாவின் நான்காவது பிரிவில் இந்தியாவில் வசிப்பவர்களுக்கு பிரிட்டிஷ் இந்தியாவிற்கு வெளியில் கிடைக்கும் வருமானத்திற்கும் வரி விதிப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. பர்மா, சிலோன், மலேயா; கொச்சின் சைனா பணப்பிரியத்தால் அவதியுறுகிறது. நெல், ரப்பர் கொப்பரா, டின் விலைகள் மிகவும் இறங்கிவிட்டன. எனினும் விற்பனையில்லை. கொச்சின் சைனாவின் நாணயமாற்று விகிதம் மிகக் குறைந்திருப்பதால் அங்கிருந்து இந்தியாவுக்குப் பணம் அனுப்பமுடியாது. இந்தச் சட்டம் இக்காலத்தில் ஏற்றதல்ல. இச்சட்டத்தினால் நிச்சயமாய் ஏற்படக் கூடியது என்னவென்றால் கடுதாசி லாபத்திற்கு வரி விதிக்கப் படுவதுதான். ஆனால் வரியை ரொக்கமாக வாங்கிக் கொண்டு விடுவார்கள். இச்சட்டம் பணம்கிடைக்கும் அதை

(17-வது பக்கம் பார்க்க.)



# இந்திய மாதருலகம்.

## விதவா விவாகத்துக்கு சட்டம் வேண்டுமா?

வடநாட்டில் மிகவும் முற்போக்கான நிலையை விரைந்து அடைந்து கொண்டு வருகின்ற காஷ்மீர தேசத்தில், கவர்ண்மெண்டு உத்தரவின் படி ஒரு தாசில்தார் ஏப்ரல் 1ந்தேதி ஸ்ரீநகரத்தில் பல பட்டணவாசிகளைக் கூட்டி விதவைப் பெண்களுக்கு மறுமண உரிமைகொடுக்கவேண்டுமாஎன்கின்றவிஷயத்தைப்பற்றியோசித்தார். அப்போது வாதிக்கப்பட்ட 2 கேள்விகளாவன:—

இந்து விதவை பெண்களுக்குமறு மண உரிமையளிக்கும் சட்டங்கள் இயற்றப்படவேண்டுமா? அல்லவா?

(2) முதற்தாரத்தை இழந்து மறுமணம் செய்கின்ற எந்தப் புருஷனும் அவனுடைய வயதைவிட 18 வருஷத்துக்குக் கீழ்ப்பட்ட பெண்களை மணமுடிக்கக்கூடாது என்ற சட்ட மியற்ற வேண்டுமா?

இக்கூட்டத்திற்கு சுமார் 400 பேர்கள் விஜயம் செய்திருந்தனர். அவர்களில் பெரும்பாலோர் இளைஞர்களும் கல்லூரி மாணவர்களு மாவார்கள். அவர்களில் ஒரு பகுதியாரால் விதவைக்கல்யாணத்தின் அவசியத்தை வற்புறுத்துகின்ற ஓர் ரசமான துண்டுப்பிரசுரம் எல்லோருக்கும் வழங்கப்பட்டது. அக்கூட்டத்திற்கு சனாதன தர்மசபா, பிராபபவன், சனாதனதர்மசபா, ஷித்தால் நாத ஆசிரமம், காஷ்மீர பண்டித சமுதாய சீர்திருத்தக் கழகம், சீக்கிய சங்கம், நாகரிக சமாஜம் ஆகியவைகள் தங்கள் காரியதரிசியையோ, அல்லது விதவா விவாகத்துக்கனுகூலமான தீர்மானங்களையோ அனுப்பியிருந்தன. வந்திருந்தவர்களில் ஒருவரிருவரைத் தவிர எல்லோரும் விவாதிக்கப்பட்ட கேள்விகளைத் தாங்கி ஓர் அறிக்கை எழுதி தாசில்தாரிடம் கொடுத்தார்கள்.

சனாதன தரும சபைத் தலைவர் மட்டிலும் ஒரு அறிக்கையால் விதவா விவாகத்தைக் கண்டித்ததோடல்லாமல், மதசம்பந்தமான அவ்விதக் கேள்விகளைப்பிறப்பித்து அவற்றிற்கு முடிவுகூற எவருக்கும் உரிமையில்லையென்றும் தரும சாஸ்திரங்களே அவ்விதக்கேள்விகளை ஆராயவேண்டுமென்றும் தருக்கம் செய்தார். உடனே அங்கு விஜயம் செய்திருந்த சனாதன சபை உபத்தலைவரும் அங்கத்தினர்களும் எழுந்து தலைவர்கூறியது சபையின் அபிப்பிராய மல்லவென்று மறுத்துக்கூறினர்கள். ஏனெனில் தலைவர் எவ்விதக்கூட்டமும் கூட்டி சபையில் ஒரு முடிவான தீர்மானத்தை ஏற்படுத்தாது மேற்படி அபிப்பிராயத்தைத்தெரிவித்து விட்டார்.

முதல் கேள்வியை எல்லோரும் ஏகமாக ஆதரித்தனர். ஆனல் இரண்டாவதுகேள்வியை சில வயது முதிர்ந்தவர்கள்கொஞ்சம் ஆட்சேபித்தனர்.

## எதிர்கால இந்தியச் சீர்திருத்தத்தில் பெண்கள் நிலை.

பஞ்சாப் பெரஸப்பூர் பாளையம் பகத்ராம் என்பவர் எழுதுகிறார்:—

ஆண்களும் பெண்களும் சமமான மனிதர்கள் என்கின்ற மனப்பான்மையிலேயே எதிர்காலத்தில் வரப்போகின்ற சீர்திருத்தம் அமைக்கப் பெறவேண்டும். ஆகவே மக்களுடைய பிற உரிமைகள் யோசிக்கப் பெறுவதோடு பெண்களுடைய உரிமைகளும் நன்கு பரிசீலனை செய்யப்பெற வேண்டுவது அவசியமாகும்.

பெண்களுக்கு வோட்டுக் கொடுக்கும் உரிமைமட்டிலும் இருந்தால் போதாது; நாம் பெண்கள் எவ்வாறு வாழ்கின்றார்கள், எவ்வாறு உலகில் இயங்குகின்றார்கள், எவ்வாறு வாழக் கூடுமென்கின்ற விஷயங்களைப்பற்றிப்பரிசீலனை செய்யவேண்டும். அவ்வாறு பார்த்தால் அடியில் வருகின்ற விஷயங்கள் தெரியவரும்:—

(1) இந்தியாவிலுள்ள ஆண்களையும் பெண்களையும் ஒப்பிட்டுப்பார்த்தால் மொத்தம் 90 லட்சம் பெண்கள் குறவாயிருக்கின்றார்களென்பது புலனாகும்.

(2) பெண் கல்வி மிகவும் குறைவு. நூற்றுக்கு 2 பேரே கல்விகற்றிருக்கின்றார்கள். சாதாரணக்கல்வி போதிக்கப் பெறும் கல்லூரிகளில் 2000 மாணவிகளே யிருக்கின்றார்கள். ஆனல் மாணவர்களுடைய தொகை 64000 த்துக்கு மேலிருக்கின்றது. இந்தப் பெண்கல்விக் குறைவு வர வர அதிகரிக்கின்றதே தவிர குறைவதாகத் தெரியவில்லை.

(3) ஆண்களுக்கிருப்பது போல பெண்களுக்கு ஒய்வு இருப்பதில்லை.

(3) இவைகளைத்தவிர பெண்களுடைய முன்னேற்றத்திற்குத் தடையாயிருக்கின்ற பல சமுதாயக் குறைபாடுகளும் இருக்கின்றன.

இந்தியவிலுள்ள பெண்களுடைய இத்தகைய விசேஷ விஷயங்கள் நன்றாக கவனிக்கப்பட வேண்டியனவாகும். பெண்களே ஒருநாட்டின் ஜனங்களின் முக்கியமானவர்கள். அவர்களே அந்நாட்டைப் படைக்கின்றார்கள். இந்திய ஜனத்தொகையின் நேர்பாதியாகிய பெண் மக்கள் மனித சமூகத்தின் பிற்புறம் ஒதுக்கித்தள்ளப் பெறுகின்ற காலமளவும் நாடு முன்னேறாது. இவ்விதமான வித்தியாச மிருக்குங் காலமளவும் எவ்விதமான வோட்டுரிமைக்காகப் பாடுபட்டாலும் பயனெய்தாது.

வோட்டுரிமையைப் பெருக்கும் பொருட்டு நான் அடியில் வரும் விஷயங்களைக் குறிப்பிட விரும்புகின்றேன்:—

(a) வோட்டுக் கொடுப்பதற்குச் ஆஸ்தியுடையவரே தகுதியுடையோர் என்றிருக்குமானல் பெரும்பாலான ஆண் மகர்க்கும் சிறுபான்மையான பெண்களுக்குமே வோட்டுரிமை கிடைக்கக்கூடும். ஏனென்றால் தற்பொதுவழங்குகின்ற இந்துச் சட்டத்தின் கீழ் ஒரு சில பெண்களுக்கே வார்சுரிமை இருக்கின்றது. இந்த விடத்தில் வேறொரு வருத்தமான விஷயமும் கவனிக்கப்பட வேண்டும். வயதுவந்த பெண்களில் பெரும் பான்மையோர் கல்யாணம் செய்யப்படுகின்ற ஏதுவால் அல்லது விதவைகளாகிவிடுகின்ற ஏதுவால் அவர்களுடைய புருஷர்கட்கிருக்கின்ற வோட்டுரிமையை அவர்களும் பின்பற்ற வேண்டியவர்களாயிருக்கின்றார்கள். இந்த நிலையை கல்வியறிவு படைத்த பெண்கள் விரும்புவதில்லை. அவர்கள் புருஷனோடு சேர்கின்ற காரணம் பற்றி சாதாரண மனிதர்கட்குக் கூட விருக்கின்ற உரிமையை இழக்க வேண்டியிருப்பதை வெறுக்கின்றார்கள்.

(b) கல்வியறிவுடைமையே வோட் கொடுப்பதற்கான உரிமை வழங்கும் என்றிருப்பினும் தவறாகும். ஆண்களோடு பெண்களை ஒப்பிட்டுப்பார்க்கும் போது பெண்கள் கல்வியறிவில் எவ்வளவோ குறைந்திருக்கின்றார்கள்.

ஆகவே நான் நினைப்பது என்னவெனில்:—

(1) ஆண்கள் என்னவகையில் பொதுஸ்தாபனங்களிலிடம் பெறப்போராடுகின்றார்களோ அதேவகையில் பெண்களும் போராடும்படியான உரிமையை யளிக்கவேண்டும்.

(2) இவ்வுரிமையை வழங்குவதோடு சில ஸ்தானங்களை அல்லது உதாரணமாக நாயர் கமிட்டி கூறியவாறு சுமார் 5 ஸ்தானங்களை ஒவ்வொரு மாகாண கவுண்ஸில்களிலும் பெண்களுக்காக ஒதுக்கி வைத்துவிட வேண்டும்.

(3) இந்த ஒதுக்கப்பட்ட ஸ்தானங்களை அடுத்துவரும் வட்ட மேஜை மகாநாடு தீர்மானப்படுத்துவது போல எவ்விதத்திலாவது நிரப்பி விடலாம்.

அன்றி வருகிற சீர்திருத்தத்தில் தங்களை பாதுகாத்துக் கொள்ள முடியாத வகுப்பாருக்காக சில பாதுகாப்பு முறைகள் எற்படுத்தப்பட வேண்டும். அது வருமாறு:—

(1) வயது வந்த எல்லா புருஷர்கட்கும் பெண்களுக்கும் முழு வோட்டுரிமை யளிக்க வேண்டும்.

(2) பெண்கள் கல்யாண மானவர்களாகவோ ஆகாதவர்களாகவோ எப்படியிருந்தாலும், வோட்டுக் கொடுப்பதற்கான யோக்கியதைகளில் ஒன்றேனுமிருக்குமானல் முழுவோட்டுரிமை கொடுக்கப்பட வேண்டும்.

(3) சர்க்கார் வேலைகளில் பெண்ணென்ற காரணத்தால் அவர்கள் புறக்கணிக்கப்படலாகாது.

## எதிர்கால சீர்திருத்தத்தில் பெண்கள் நிலை.

"விடோஸ் காஸ்" என்ற லாகூர் ஆங்கில மாதப்பத்திரிகை எதிர்கால இந்திய சீர்திருத்தத்தில் பெண்களின் நிலை என்ற தலைப்பின் கீழ் எழுதுவதாவது:—

சமீபத்தில் கூடிய கராச்சிக் காங்கிரஸில் பெண்களுக்கு, புருஷர்கட்கிருப்பது போன்ற ஓட்டுரிமையும் சொத்துரிமையும் கிடைப்பதற்கான விஷயங்களில் காங்கிரஸ் தலையிட வேண்டுமென்கின்ற பிரசினையைப் பற்றி யோசிக்கும் பொருட்டு பம்பாயிலுள்ள பல பிரபல மாதர்கள் காங்கிரஸ் விஷயாலோசனை கமிட்டி மெம்பர்கட்கு மார்ச்சு 1-ந்தேதியோர் தந்தியனுப்பினர்கள். பெண்களின் நியாயமான இவ்வேண்டுகோட்கு எவரும் செவி சாய்க்கவில்லை யென்று தெரிகிறது.

தற்காலத்தில் இந்திய சமுதாய நிலைமையை யுணர்ந்திருக்கின்ற எந்தக் கமிட்டியும் நம் நாட்டுப் பெண் மக்களுக்கு கல்வி, சுகாதாரமாகிய இரு துறைகளிலும் கொடுமை செய்கின்ற சில சமுதாயப் பழக்க வழக்கங்களிலிருந்து விடுதலை யளிக்க வேண்டுமென்பதை உணர்ந்திருக்கக்கூடும். உண்மையான நாட்டன்புடைய எவனும் பெண்களுக்கு விதித்திருக்கின்ற சட்டங்களை பார்ப்பானாயின் வருகிற சீர்திருத்தத்தில் அவர்கட்கு பல உரிமைகளை வழங்கவேண்டுவது இன்றியமையாததென்று கூறுவானென்பது உறுதியாம். பெண்கள் அத்தகைய நீதியை ஏன்பெற வேண்டுமென்றால், அவர்கள் நம்மை பாதுகாக்கிறார்கள்; நம்மை தூண்டுகிறார்கள்; சுருங்கச் சொன்னல் நம்மை மக்களாக்குவதோடு தேசத்தையும் படைக்கின்றார்கள். பன்னெடும் ஆண்டுகளாக அவர்களை அடிமைப்படுத்தி வருகின்ற இந்தியாவைப் போன்ற ஒரு தேசத்தில் அவர்கட்கு எதிர்கால சீர்திருத்தத்தில் என்ன செய்யவேண்டும்?

தற்போதிருக்கின்ற இந்துச் சட்டப்படி பல பெண்கள் தாய் தந்தையர்களுடைய ஆஸ்திக்கு உரிமையுடையவராக முடிவதில்லை. எனவே சிலர்கூறுவதுபோல "எல்லா ராஜ்யவாசிகட்கும் சமமான உரிமையுண்டு என்று கூறிவிடுவதோடாமையால்" அவர்கட்கு தற்போதிய சட்டத்தைத் திருத்தி சொத்துரிமைக்கான பல புதிய சட்டங்களியற்றப்படுமென்ற வாக்குறுதியைகூறவேண்டும். அதோடு காங்கிரஸ் தீர்மானங்களில் 11-வது பகுதி அதாவது வயதுவந்தவர்கட்குள்ள அடிப்படையான உரிமைகள் என்கின்ற இடம் வெளிப்படையாகக் கூறப்படவில்லை. அது ஆண்களை மட்டிலுந்தானா குறிக்கின்றது? அல்லது எல்லோரையும் குறிக்கின்றதா? மிகவும் அவசியமான ஒரு தீர்மானத்தை இத்தகையஇருபொருள்படும்படியான முறையில் போட்டிருப்பதற்காக வருந்துகிறோம்.

சமீபத்தில் நடந்த தேசிய போராட்டத்தில் இந்துப்பெண்கள் இந்தியாவின் உரிமையை நாடுவதில் ஆண்களைவிட முற்போக்குடைத்திருந்தார்கள் என்பதை நன்கு விளக்கிற்று. அவர்கள் பரந்த நோக்கத்தோடும் மிகுந்த ஊக்கத்தோடும் தியாகத்தோடும் போராடி அபலைகள் என்கின்றபெயரைமாற்றிபெருக்குணமுடையோர் என்ற உயரிய பேருக்கு அருகதை உடையவர்கள் என்பதைக் காட்டிக்கொண்டார்கள். எனவே புருஷர்களைப்போல அவர்களும் பாதுகாக்கப்படவேண்டுமென்பதனைக் கண்டுவிட்டோம். ஆகவே புருஷர்கட்கு பாதுகாப்பளிக்கவேண்டுமென்று கருதுகிறவர்கள் பெண்களுக்கும் பாதுகாப்பளிக்க முன்வரவேண்டும்.

# சிறுகதைப்பகுதி:

பண்டித எஸ். முத்துசாமி பிள்ளை.

## ஆண்டிக்கு வந்த அதிர்ஷ்டம்.

கோமளரங்க முதலியார் சென்னை பி. ஆர். அண்டு சன்ஸ் கம்பெனியில் ஒரு குமாஸ்தா. சம்பளம் மாதம் 50 ரூபாய். சென்னையில் 50 ரூபாய் ஒரு சம்பளமா? டிராமுக்கு 5, காபிஹோட்டலுக்கு 10, டிராமா சினிமா உகையருக்களுக்கு 5, சிகரட்டு வெற்றிலைபாக்குக்கு 5, பார்பர் சலூன்களுக்கு 2, ஆகமொத்தம் செலவு 27 ரூபாய் போனால் பாக்கி 23 ரூபாய்தான் முதலியார் தாயார்கையில் போய்ச் சேரும். அதிர்ஷ்டவசமாய் தாயும் மகனும் தவிர வேறு ஆளில்லை; எனினும் சென்னைச் செலவுக்கு ரூபா 23 பற்றுது. ஆகவே வீட்டில் ஒரு பகுதியை குடிக்கூலிக்குவிட்டு குடும்பச் செலவை ஒருவாறு செட்டாய் தாயார் நடத்திவந்தாள்.

கோமளரங்கத்துக்கு வயது 30 ஆகிவிட்டது. தகப்பனார் சிறுவயதிலேயே இறந்து போனார். தாய் மாமனார் ஒருவர் மலாய் நாட்டுக்குச் சென்றவர் இதுசமயம் திரும்பிவரவில்லை. கோமளரங்கம் படிப்பு முடியுமட்டும் அவர் நாட்டிலிருந்து மாதா மாதம் சொற்பப் பணம் அனுப்பிக் கொண்டிருந்தார். கோமளரங்கம் படிப்பு முடிந்து உத்தியோகத்திலமர்ந்ததும் பணவரவும் நின்றது; கடிதம் கிடையாது. மாமனாரைப்பற்றிய தகவல்கள் அறிய கோமளரங்கம் எவ்வளவோ முயன்று பார்த்தான். ஒன்றும் சாயவில்லை. பிறகு அவர் ஞாபகத்தையே விட்டுவிட்டான். தாய்க்கும் வயது 65 க்கு மேலாயிற்று. கண்பார்வையும் சற்று மங்கிற்று. வீட்டு வேலைகளை கவனிப்பதும் சிறிது கஷ்டமாயிற்று. ஒரு பெண்ணைப்பார்த்து மகனுக்கு கல்யாணம் செய்து வைத்துவிட வேண்டுமென்று எவ்வளவோ பிரயத்தனப்பட்டார். கோமளரங்கத்தின் தகப்பனார் தங்கை மகள் ஒரு பெண் மயிலாப்பூரில் இருந்தாள். அவள் பெற்றோருக்கு அந்தப் பெண் ஒரே மகள். அந்தப் பெண்ணைத் தன்மகனுக்குக் கேட்டு தாயார் மாதந்தோறும் மாதாந்தம்போல் நடந்துவந்தாள். தன் தமயன் மகனுக்குப் பெண்ணைக் கொடுக்கத் தாய்க்கு சம்மதமாயினும் தகப்பன் இசையவில்லை. அவன் பணவாசைபிடித்த பேயன். உலகத்தில் பணத்தைவிடப் பெரியது ஒன்றுமில்லை யென்ற கொள்கையுடையவன். ஆகவே 50 ரூபா மாதச் சம்பளமும் ஒரு வீடும் தவிர வேறு சொத்தில்லாத கோமளரங்கத்துக்குத் தன் மகளைக் கொடுக்க அவன் இசைவானா? கோமளரங்கத்தின் தாயார் விடாப்பிடியாய் நடப்பது கண்டு அயலார் பெண்ணின் தாயாரிடத்துப் பலவாறு உபதேசம் செய்யத்தொடங்கினார்கள்.

"லீலா கோமளரங்கத்துக்கு முறைப்பெண்தானே. அவன் துணிகரமாக வந்து கள்ளத்தாலி கட்டிவிட்டால் நீங்கள் என்ன சாதித்து விடப்போகிறீர்கள். அவனைத் தடுக்க யாருக்கு அதிகாரமுண்டு? வயதான கிழவி எவ்வளவோ ஆசைப்பட்டு நடைவாநடை நடக்கிறாள். அவள்மனம் நோகும்படி செய்யலாமா? வயதான கிழவி கோவிலுக்கு சமானமல்லவா? அவள்மனம் நொந்தால் குமர்வாழுமா?" என்றெல்லாம் அயலார் லீலாவின் தாயிடம் ஹிதோபதேசம் செய்யத் தொடங்கினர். பழமைக்காரியான லீலாவின் தாய்க்கும் அது சரியென்றே பட்டது. எனவே இரவும் பகலும் தன் புருஷனிடம் தலையணை மந்திரோபதேசம்செய்யத் தொடங்கினாள். தலையணை மந்திரம் எல்லா மந்திரங்களையும்விட மிக வலிமையுடைய தல்லவா? தலையணை மந்திரத்துக்கும் பணியாத சாமி மாருண்டா? ஆகவே பேராசை பிடித்த லீலாவின் தந்தை சொக்குமுதலியாரும் கோமளரங்கத்துக்கு லீலாவைக் கொடுப்பதாக திராப்பொறியாய்ச் சம்மதித்தார். நிச்சயார்த்தத்துக்கும் நாள் குறிப்பிடப் பட்டது. கோமளரங்கம் அளவிலா ஆத்மமடைந்தான். அவன் தயார் களிப்பு மிகுதியால் 40 வயதுப் பெண்ணுக்கொத்த பூரிப்படைந்தாள். கலியாணச் செலவுக்காக ஒரு மார்வாடியிடம் கோமளரங்கம் ஆண்டிமாண்டில் 500 ரூபா தான் வாங்கினான். 100-க்கு 15 கமிஷன் கழித்துக் கொண்டு மார்வாடி 425 ரூபா ரொக்கம் கொடுத்தான். மாதாமாதம் ஒரு ரூபாய்க்கு ஒரு அணவட்டி. பெண்கிடைத்த சோர்க்கத்தினால் வட்டிக் கணக்கை ஒன்றும் அவன் எண்ணிப்பார்க்க வில்லை. ஆனால் நிச்சயார்த்தத்துக்கு இரண்டு நாட்களுக்கு முன்னே அவர் எதிர்பாராத ஒரு சனியன் முளைத்தது. பொன்னேரியிலிருந்து ஒரு மாப்பிள்ளைத் தரம் லீலாவுக்கு வந்தது. மாப்பிள்ளை லக்ஷப்பிரபு, லீலாவுக்கு 500 ரூபாய் நகை போடுவதாயும் சொக்கு முதலியாருக்கு3000 ரூபாய் இனம் கொடுப்பதாயும் ஒரு தரகன் மூலம் பொன்னேரி மாப்பிள்ளை சொக்குமுதலியாருக்குச் செய்தியனுப்பினார். பணமென்றால் பிணமும் வாய்பிளக்காதா? ஆகவே சொக்குமுதலி பொன்னேரி மாப்பிள்ளை பக்கம் சாய்ந்து விட்டான். நிச்சயார்த்த தினத்துக்கு தலைநாட் காலை கோமளரங்கத்துக்கு இந்த சமாசாரம் தெரியவந்தது. கோமளரங்கம் இடிநாதம் கேட்ட சர்ப்பம் போல் நடுநடுங்கினான். கைக்கெட்டியது வாய்க்கெட்டவில்லையே யென்று மனம் நொந்தான். நிச்சயார்த்தம் குறிப்பிட்ட பிறகு முறைப் பெண்ணை இழப்பதைவிட உயிர் துறப்பதே சிறந்ததென்று முடிவு செய்தான். ஆகவே திருவல்லிக்கேணி திலகர் சட்டத்தை நோக்கி நடந்தான். ஹைகோர்ட்டு கடற்கரையை அடைந்து ரஸ்தாஓமாய் திலகர் கட்டத்துக்கு நடக்கலானான். சமுத்திரக்காற்று அவனது வெம்பிய மனத்துக்குச் சிறிது ஆறுதலளித்தது. வெப்பம் தணிந்ததும் சித்தம் சிறிது சாந்தமடைந்தது. மனம் நோகும்போது துன்பத்துக்கு நிவர்த்திமார்க்கங்கள் தோன்றுவது சிலரதுஇயல்பு.கோமளரங்கம் தனிமையாக நடந்து கொண்டிருக்கையில் ஒரு மரத்தடியில் உட்கார்ந்திருந்த ஒரு ஆண்டியைக் கண்டதும் பளிச் சென்று அவனது ஹிருதய கமலத்தில் ஒரு யோசனை தோன்றிற்று. ஆண்டியண்டை சென்றான். முகத்தை உற்றுநோக்கினான். அவன் பரம்பரையாண்டியல்ல வெனக் கண்டான்.

கோமளம்:—ஐயா! ஏன் இப்படி உட்கார்ந்திருக்கிறீர்.

ஆண்டி:—உயிர் போகாததினால் உட்கார்ந்திருக்கிறேன்.

கோமளம்:—உயிர் என்ன சொக்கா? குருவியா? நீர் நினைத்ததுபோல் பறந்து போவதற்கு?

ஆண்டி:—நான் உயிரை விடத்தயார்தான். பாபி உயிர் போகமாட்டேன் என்கிறதே!

கோமளம்:—உயிரை விடும் அளவுக்கு என்ன வந்து விட்டது?

ஆண்டி:—சாப்பிட்டு மூன்று நாளாச்சுது. வயிறு காய்ந்தவர்களுக்கு உயிர் என்ன கட்டிக்கரும்பா?

கோமளம்:—இவ்வளவுதானா சங்கதி? 4 அணா உண்டானால் வயிறு நிரம்பி விடாதா?

ஆண்டி:—ஓகோ தாராளம் நிரம்பிவிடும். ஆனால் நாலு பைகூட கையில் இல்லையே.

கோமளம்:—சரி. உம்முடைய பசியையும் ஆற்றலாம்; மேலும் உமக்கு பட்டினி புண்டாகாமலிருக்க வழியும் செய்யலாம். நான் சொன்னபடி கேட்கத் தயார்தானா?

ஆண்டி:—நான் என்ன செய்யவேண்டும்? கொலை செய்யவேண்டுமா? கொள்ளையிடவேண்டுமா?

கோமளம்:—கொலையும் கொள்ளையும் ஒன்றும் வேண்டாம். வெகு சுலுவான வழி; ஒரு கஷ்டமுமில்லை. கொஞ்சம் புத்திசாலித்தனம் தான் வேண்டும்.

ஆண்டி:—பேச்சை நீட்டாமல் வழியைச் சொல்லித் தொலையும்.

கோமளம் ஆண்டிகாதில் ஏதேதோ சொன்னான். கோமளத்தின் வார்த்தைகள் ஆண்டியின் காதுக்கு விழ விழ ஆண்டி முகம் மலர்ந்தான். ஆண்டி வாடி ஒட்டிய தன்வயிற்றைப் பலமுறை உற்று நோக்கினான்."சரி" என்று சம்மதித்தான்.

கோமளரங்கத்துக்குண்டான மகிழ்ச்சிக்கு அளவில்லை. காந்தி விடுதலை பெற்ற அன்று இந்தியர்கள் அடைந்த மகிழ்ச்சி கோமளத்தின் மகிழ்ச்சிக்கு உறைபோடவும் பற்றாது. ஆண்டியை அழைத்துக்கொண்டு ஆரியபவனத்துக்குச் சென்றான். அவன் வயிறு புடைக்கு மட்டும் பூரிவடை காபி முதலியன வாங்கிக்கொடுத்தான். ஆண்டி வயிறார உண்டு முடிந்ததும் கோமளம் அவனை ஒரு பார்பர் சலூனுக்கு அழைத்துச் சென்றான். அப்பால் ஆண்டிக்கு சில சம்மர் கிராப் வேலை நடந்தது. கிராப்பு முடிந்த தலை சிங்காரிக்கப்பட்டு வெளிவந்ததும கோமளம் ஆண்டிக்கு வேஷ்டி, ஷர்ட்டு, கோட்டு, தலைப்பாகை, அங்கவஸ்திரம் முதலியவை வாங்கி கொடுத்தான்.

ஆண்டி 5 நிமிஷத்துக்குள் கோடிப்பிரபு ஆய்விட்டான்.

சரி! இனி வீட்டுக்குப் போகலாமா? என்றான் கோமளம்.

"சேபியில் ஒன்றுமில்லையா? கோடீசுரப்பிரபு சேபி வெறும் சேபியாயிருக்கலாமா? ஒரு "மணிபர்ஸ்" வேண்டாமா?" என்றான் ஆண்டி.

கோமளம் நகைத்துக் கொண்டே ஒரு "மணிபர்ஸ்" வாங்கிக்கொண்டுத்தான்.

தம்பி! உமக்கும் கொஞ்சமும் விவேகமில்லை. வெறும் பர்ஸை எந்தப் பைத்தியகாரனாவது சேபியில் போட்டிருப்பானா? சில்லறை கொஞ்சமாவது வேண்டாமா" என்றான் ஆண்டி.

"நீர்பலே ஆசாமிதானய்யா?" என்று நகைத்துக்கொண்டே கோமளம் ஒரு ரூபாயைக் கொடுத்தான்.

ஆண்டி ரூபாயை வாங்குவதற்கு பதிலாக கோமளம் முகத்தைப்பார்த்து நகைத்தான்.

"ஏனய்யா நகைக்கிறீர்" என்றான் கோமளம்.

"லக்ஷப்பிரபு பர்ஸில் ஒரு ரூபாய் கிடப்பதை நாலுபேர் பார்த்தால் நகைக்கமாட்டார்களா? என்றால் அவமானப்பட முடியாது. உம்முடைய சாமான்களைத் தந்து விடுகிறேன். என்னை மானமாக அனுப்பி விடும்" என்றான்.

அரை மணி நேரத்துக்கு முன் உயிரை விடத் தயாராயிருந்த ஆண்டிக்கு இப்பொழுது வந்திருக்கும் பெருமையைப்பார்த்த பொழுது கோமளத்துக்கு அடக்கமுடியாத சிரிப்பு வந்துவிட்டது. ஆனாலும் என்ன செய்வான்? காரியம் நடக்கும் வரை கழுதையின் காலைப்பிடிக்கத்தானே வேண்டும்? ஆகவே ஒரு பத்து ரூபா நோட்டைக் கொடுத்தான்.

ஆண்டி அதை வாங்கி பர்சுக்குள் போட்டான்.

அப்பால் இருவரும் ஒரு ரிக்ஷாவில் ஏறினார்கள். ரிக்ஷா கோவிந்தப்ப நாயக்கன் தெரு 30-வது நெம்பர் கோமளத்தின் வீட்டு முன்வந்து நின்றதும் இருவரும் இறங்கினர். கோமளம் ரிக்ஷா வாலாவுக்கு கூலிகொடுத்து அனுப்பிவிட்டு ஆண்டியை வீட்டுக்குள் அழைத்துச் சென்றார். அம்மா! சிங்கப்பூர் போனமாமா வந்து விட்டார்கள் எனத் தாயாரிடம் பேராநந்தத்தோடு தெரிவித்தார்.

கிழவி ஆண்டியை ஒருமுறை வெறிக்கப் பார்த்தாள். "அண்ணா! எங்களையெல்லாம் மறந்துவிட்டு எப்படி மனந்துணிந்து இருந்தீர்" எனக்கதறிக்கொண்டே ஆண்டிகால்மாட்டில் விழுந்தாள். ஆண்டி வாரி எடுத்து கிழவியை "எல்லாம் பகவான் செயல்" நடந்ததெல்லாம், போகட்டும். கடைசியில் வந்து சேர்ந்து விட்டேனல்லவா! வீட்டுக்குள் குந்தியிருந்தால் வயிறு நிறையுமா!பாடுபட்டால்தானே பண முண்டாகும். பணமில்லாதவன் பிணமல்லவா? என்றெல்லாம் ஆண்டி பிரசங்கமாரி பொழியத் தொடங்கினான்.

அவ்வளவுதான், கோமளத்தின் வீடு அமர்க்களமாயிற்று. பக்கத்துவீட்டாரெல்லாம் வந்து கூடிவிட்டனர். வெகு நாள் பழக்கமுடையவர்கள் போல் ஆண்டியிடம் க்ஷேமம் விசாரிக்கத் தொடங்கினர். மலாய் நாடு சென்றபிறகு கோமளத்தின் மாமனார் தாய்நாடு திரும்பிய சமாசாரம் சென்னை நகரம் முழுதும் பரவிற்று. கலியாணத்தரகர் காசி முதலியாரை கோமளம் மயிலாப்பூர் சொக்கு முதலியார் வீட்டுக்கு அனுப்பினான்.

காசி முதலியார் அண்டத்தைப் புரட்டும் ஆசாமி என்றும் கோமளம் அவரை ஏமாற்றி விட்டான். வந்தவர் கோமளத்தின் மாமனார்தான் என்றும் 5 கோடிக்கு ஆஸ்தியுடையவர் என்றும் காசி முதலி மெய்யாகவே நம்பினான்.

எனவே காசி முதலி சொக்கு முதலி வீட்டுக்குச் சென்றதும் கோடீஸ்வரப் பிரபுவின் வரலாற்றை விளம்பத் தொடங்கினார்.

"கலியாண விஷயத்தில் நாம்நினைத்தபடியொன்றும் நடவாது.கோடீஸ்வரனுக்கு மனைவியாகப் போகும் லீலாவின் பாக்கியத்தை யாரால்தடுக்க முடியும்? சிங்கப்பூர் சென்றவர் நாளை வந்திருந்தால் எல்லாம் தவறிப் போயிருக்குமே? தெய்வசங்கல்பம் தான் அவர் இன்று வந்துசேர்ந்தது. கோமளத்தின் மாமனாருக்கு 5 கோடிக்குச் சொத்திருக்கிறதாம்? வாரிசில்லை, 5 கோடிக்கும் கோமளந்தான் எஜமான். லீலா மகாபாக்கியவதி. 5 கோடிப் பிரபுவின் மாமனார் பாட்டை பின் சொல்லவேண்டும்" என்று கதையை நீட்டினான் காசிமுதலி. சொக்குமுதலி சொக்கிப்போய் விட்டான். மறுவார்த்தை பேசாமல் கோமளத்துக்குப் பெண்கொடுக்க இசைந்தான்.

மறுநாள் இரவு 10 மணிக்கு நிச்சயார்த்தம் செய்ய முகூர்த்தமும் நிச்சயிக்கப்பட்டது.

தான் நினைத்தபடி எல்லாம் முடிவுபெற்று வருவது கண்டு கோமளரங்கம் ஆநந்தக் கடலில் மூழ்கினான். காசிமுதலியாரும் ஆண்டியும் வெகு சீக்கிரத்தில் நேசராகி விட்டார்கள். மறுநாள் மாலை 4-மணியானதும் மயிலாப்பூர்ப் பிரயாணத்துக்கு வேண்டிய ஆயத்தங்கள் செய்யப்பட்டன.

6 மணியானதும் ஆண்டி காசிமுதலி கோமளத்தின் தாயார் பக்கத்து வீட்டுக்காரர் ஆண்பெண் குழந்தை குட்டிகள் உட்பட பதினைந்துபேர் ஆக மொத்தம் 18 பேரும் நிச்சயார்த்தத்துக்காக 4 வாடகை மோட்டாரில் மயிலாப்பூருக்குப் பிரயாணமானார்கள்.

மாப்பிள்ளை வீட்டார் பெண் வீட்டையடைந்ததும் சொக்கு முதலி அவர்களுக்கு ராஜோபசாரம் செய்தார். வந்தவர்களுக்கு தாம்பூலாதிகள் வழங்கி உட்கார வைத்துவிட்டு சொக்கு முதலி லீலா அவள் தாயார் மாப்பிள்ளையின் அம்மான் ஆண்டி காசி முதலியோர் கபாலீசர் கோவிலில் தரிசனம் செய்துவிட்டு வருவதாக வெளியேறினர்.

ஆலயம் சென்றதும் காசி முதலியும் சொக்கு முதலியும் சேர்ந்து செய்திருந்த முன் ஏற்பாட்டின்படி கோடீசுரப் பிரபு ஆண்டிக்கும் லீலாவதிக்கும் கபாலீசுவரர் சந்நதியில் திருப்பூட்டு வைபவம் நடைபெற்றது.

லீலாவின் தாயார் திகைத்து "இது என்ன முழு மோசமாயிருக்கிறதே" என்று வாய்விட்டுக் கத்தினாள்.

"வாயைமூடு. இவர் கொடுத்தால்தானே கோமளத்துக்குக் கோடி கிடைக்கும். லீலாவுக்கு இப்பொழுது 5 கோடியும் நேரடியாக கிடைத்துவிட்டதே" என்றான். சொக்கு முதலி, லீலாவின் தாயார் திருப்தியடையவில்லை; எனினும் அவளால் என்ன செய்ய முடியும்? பெண்கள் புருஷர்களுக்கு அடிமைதானே.

லீலாவும் ஆண்டியும் மணக்கோலத்துடன் வீடு திரும்பிவருவதுகண்ட கோமளத்தின் அயல் வீட்டாரும் கோமளத்தின்தாயும் திகைப்புற்றனர். நடந்த மோசடி அறிந்ததும் சென்ற மோட்டாரில் தானே கோவிந்தப்ப நாய்க்கன் கோமளரங்கத்துக்கு சமாசாரமெல்லாம்தெரிவித்தனர்.

கோமளரங்கம் என்ன பாடுபட்டிருப்பான் என்று சொல்லவும் வேண்டுமோ?

ஆண்டியின் வரலாறு இரண்டு நாளையில் வெட்டவெளிச்சமாயிற்று. ஆனால் என்ன?

லீலாவின் கழுத்தில் ஆண்டி கட்டிய தாலியை யாராவது அசைக்க முடியுமா!

பதினாயிரம் ரூபாய் தரகை நம்பி இந்த முழுமோசம் செய்த காசி முதலி கண்ணும் கம்பலையுமாய் கடைசியில் வீடுதிரும்பினான்.

---



# இந்தியச் செய்திகள்.

ஸ்ரீமதி டாக்டர் சுப்பராயனவர்கள் ஊட்டியில் நோய்வாய்பட்டிருக்கின்றார்.

0 0 0

கல்கத்தா கார்ப்பொரேஷன் ஓர் அபிவிருத்தித்திட்டம் தயாரித்திருக்கின்றது; அதைசர்க்கார் ஒப்புக் கொண்டுவிட்டனர்.

0 0 0

ஸர் பி. என். மித்ரா இவ்வாரம் பம்பாயிலிருந்து புறப்பட்டு லண்டன் சென்று இந்திய ஹைகமிஷனர் பதவியை ஏற்றுக் கொள்வார்.

0 0 0

திரு. கே. ராகவேந்திர ராவ் கோயம்புத்தூருக்கும் நீலகிரிக்கும் 3 வருஷம் சர்க்கார் வக்கீலாக, சர்க்கார் நியமித்திருக்கிறார்கள்.

0 0 0

ஜூன் 12-ந் தேதி காலை பம்பாய்க்கு சமீபம் கடலில் போய்க் கொண்டிருந்த ஒரு படகு மான்சூன் காற்றில் சிக்கி அமிழ்ந்து போய்விட்டது. மறுநாள் இருபெண்களின் பிரேதம் மட்டிலும் மிதக்கக் காணப்பட்டன.

0 0 0

திரு ஜே. என். சன்யாலே என்பவரால் எழுதப்பட்ட "சர்தார் பகத்சிங்" என்ற புஸ்தகத்தை சர்க்கார் பறிமுதல் செய்ததுடன் மேற்படி ஆசிரியரின் வீட்டைப் பரிசோதனை செய்து பாக்தாரி, ஜவான் என்ற வேறு ஒரு புஸ்தகத்தின் சில காப்பிகளையும் கைப்பற்றினர். அதோடு அவரும் கைதுசெய்யப் பட்டிருக்கிறார்.

0 0 0

எல்லைப்புற காந்தியின் சங்கத்தாரான செஞ்சட்டையினரால் ஏற்படும் ஆபத்தைத் தடுக்கவும், ஜமீன்தார்களுடையவும் நிலச்சுவான்தார்களுடையவும் உரிமைகளைப் பாதுகாக்கவும் "பச்சைச் சட்டையினர் சங்கம்" என்ற புதிய சங்கம் ஸ்தாபிக்கப் பட்டிருக்கிறது. இதன் தற்காலிகத் தலைமைக்காரியாலயம் பெஷா வாருக்கருகிலுள்ள கலீல் கிராமங்களுள் முக்கியமான தோக்கால் கிராமத்திலிருக்கிறது.

0 0 0

திரு. சென்குப்தாக் கட்சியைச் சேர்ந்த திரு. பிரபுல்லசென், திரு. விஜயசென் இவர்கள் தட்பாரா ஆசிரமத்திற்குப் பக்கத்திலுள்ள ஒரு குடிசையில் தூங்கிக் கொண்டிருக்கையில், சுபாஷ்பாபு கட்சியைச் சேர்ந்த திரு. இந்து பூஷண சக்ரவர்த்தி, திரு. சுசீல சக்கிரவர்த்தி இருவரும் குடிசைக்குள் கத்தியுடன் சென்று அவர்களை குத்தியதாக குற்றம் சாட்டி போலீசார் கைது செய்து அவர்களை காவலில் வைத்திருக்கிறார்கள்.

0 0 0

பாத்வார ஜமீன்தார் கோஷ்டியார் துப்பாக்கி முதலிய ஆயுதங்களை வைத்துக் கொண்டுகுடியானவர்களைமிரட்டி வரிவசூலித்து வந்தனர். ஜமீன்தார் ஆட்களின் கொடுமையை ஜனங்கள் தாங்க முடியாமல் ஜமீன்தார் வீட்டிற்கு தீ வைத்து விட்டனர். ஷெ தீ விபத்தில் மாளிகையில் 8 பேர் சாம்பலானார்கள். ஜமீன்தாரும் அவரது ஆட்களும் குடியானவர்களை துப்பாக்கியால் சுடவே, குடியானவர்கள் அவர்களிடமிருந்த துப்பாக்கியைப் பறித்துக் கொண்டு ஜமீன்தாரையும் மற்றும் 6 பேரையும் கொன்றுவிட்டார்கள்.

0 0 0

ஜூன் 14-ந்தேதி பெய்த மழையினாலும் இடித்த இடியினாலும் மீனம்பாக்கத்தில் பவர் அவுஸுக்கு சமீபத்தில் எலக்டிரிக் ரெயில்கள் ஓடுவதற்கு அமைக்கப்பட்ட கம்பிகள் இரண்டு இடத்தில் பலமாக அறுபட்டுவிட்டன. இவ்விபரம் காலையில் தான் தெரிந்தது. 15-ம் தேதி காலை 9 மணிக்கு சில இஞ்சினியர்கள் வந்து அறுக்கப்பட்ட எலக்டிரிக் கம்பிகளை பழுதுபார்க்கும் சமயத்தில் ஒருவர் மின் சாரத்தால் தாக்கப்பட்டு மேலேயிருந்து விழுந்து விட்டார். பிரதம சிகிச்சை நடந்தது. பிரயாணிகள் பிரயாணம் செய்வதற்கு வண்டி வசதிகள் அன்று சரியாகவில்லை. ஆயினும் ரெயில் அதிகாரிகள் மிக்க பிரயாசைப்பட்டு சில ஸ்டீம் இன்ஜின்களை வெவ்வேறு இடங்களிலிருந்து தருவித்து விட்டு வருகிறார்கள்.

கும்பகோணத்திலிருக்கும் ஸ்மால்காஸ் கோர்ட்டை ஜூன் 20 லிருந்து எடுத்து விடும்படியாக சர்க்கார் உத்திரவு பிறப்பித்திருக்கிறார்கள்.

0 0 0

அசாம் மாகாணத்தில் சர்க்கார் அதிகாரிகளின் படிச் செலவுகளை 100-க்கு 26 விகிதம் குறைத்துவிட்டனர். மற்றும் பல தலைப்புகளில் குறைக்கும் வழிகளை யோசித்துவருகிறார்கள்.

0 0 0

கல்கத்தா விக்டோரியா மெமோரியலுக்கு அருகில் கிடந்த ஓர் பெண்ணின் பிரேதத்தைப் பரிசோதனை செய்து விட்டு டாக்டர்கள் அவள் பட்டினியின் கொடுமையால் அபின் தின்றிறந்தாளென்று கூறினார்கள்.

0 0 0

இந்திய மந்திரி சபை மெம்பர் பதவிக்கு ஸர். வில்லியம் வின்சென்டிற்குப் பதிலாக ஜூலை 10-ந் தேதி முதல் ஸர். அப்துல் சாட்டர்ஜியையும், ஸர் ராபர்ட்ஹாலண்டுக்குப் பதிலாக ஜூலை 14-ந் தேதி முதல் ஸர். ரெஜினல்டு கிளான்வியையும், இந்தியா மந்திரி நியமித்திருக்கிறார்.

0 0 0

சென்னை "யூனிக் எக்ஸ்ரே" ஸ்தாபனத்தின் டைரக்டரான டாக்டர் திரு. பி. ராமராவ் அவர்கள் ரேடியாலஜி என்னும் வைத்திய சாஸ்திரப் பகுதிகளில் தேர்ச்சி பெற இம்மாதம் ஐரோப்பாவுக்கு செல்லுகிறார். பாரிசில் ஜூலை மாதத்தில் கூடும் சர்வதேச 'ரேடியாலஜி' காங்கிரசிற்கும் செல்லுவாராம்.

0 0 0

பெஷாவார் முனிசிபாலிட்டி தன அபொருளார்த நிலையை முன்னிட்டு, மிருகக்காட்சி சாலையை மூடிவிட்டது. இதிலுள்ள சிங்கங்களும், புலிகளும், இதர மிருகங்களும், ஏதேனும் ஒரு இந்திய சமஸ்தானத்திற்கு விற்கப்படும். இக்காட்சிசாலை எல்லைப்புறத்திலும் ஆப்கான் ஸ்தானத்திலுள்ள மலைச்சாதியாரும் கண்டுகளிக்கக்கூடிய இடமாகவிருந்தது.

0 0 0

புதிய டில்லியில் 13-ம் தேதி விளம்பர இலாகாபுத்தகசாலையின்ரெக்கார்டுஅறையில் தீவிபத்து ஏற்பட்டு கவர்ன்மெண்ட் யாதாஸ்துகள் பலவும் எரிந்து போயின. போலீசார் ரிகார்டு அறையிலிருந்து புகை வெளிவருதைக் கண்டு கூச்சலிட்டனர். நீயணைக்கும் படைவரு முன்பு ஜலம் தூக்கிகளும் போலீசாருமே தீயை அணைத்து விட்டனர். தீ பற்றிய காரணமெதுவும் தெரியவில்லை.

0 0 0

பம்பாய் கோடாக் கம்பெனியார் இந்தியா, பர்மா, இலங்கை, ஆப்கானிஸ்தானம், ஏடன் ஆகிய விடங்களில் தொழில்முறையில் புகைப்படக்காரர்களாகவில்லாமல் பொழுது போக்குக்காக புகைப்படம் பிடிக்கும் தொழில் செய்பவர்களுக்குள் ஒருபோட்டிவைத்தார்கள். அந்தப் போட்டியில் பம்பாயைச் சேர்ந்த திரு. காரகட் என்பவர் வெற்றிபெற்றார். அவருக்கு 2500 ரூபாயும் ஒருபதக்கமும் மற்றொரு 500 ரூபாயும் வெகுமதியாகக் கொடுக்கப்பட்டது. 35000 படங்கள் இப்போட்டிப்பரிசைக்காக வந்திருந்தன. இந்த பரிசு பெற்றவர் இனி நடக்க விருக்கும் சர்வதேச கோடாக் போட்டி பரிக்ஷையிலும் வெகுமதியடைய கூடும் எனத் தெரிகின்றது.

0 0 0

மேற்கிந்திய வஜேர சமஸ்தான பிரஜை பிரபல காங்கிரஸ் தொண்டர் திரு வீரசந்திர பிகாபாய்சேட் என்பவர், சமஸ்தானாதிபதியின் பந்து மித்திரர்கள் வசிக்கும் தர்பார்காட் என்னும் பெரிய வீதியில், சாதாரணமான 'கிக்கா' அணிந்தும் தலையில் பாகையில்லாமல் வெறுந்தலையோடு சென்ற குற்றத்திற்காக, சமஸ்தானாதிபதியே அவருக்குச்சரியான அடியும் உதையும் கொடுக்கும்படியும் இன்னும் பலவித இம்சைகள் செய்யும்படி உத்திரவிட, சேவகர் அவ்வாறே இம்சித்தார்கள். இதைப்பற்றி திரு வீரசந்திரர் மேற்கிந்திய சமஸ்தானங்களின் பிரிட்டிஷ் சர்க்கார் ஏஜண்டினிடம் முறையிடு செய்துக் கொண்டிருக்கிறார்.

நாகபட்டணத்திலுள்ள பல ஜவுளிக்கடைக்காரர்கள் (ஒருவரைத்தவிர பிறர்) காங்கிரஸ் காரர்களோடு ஒத்துச் சேர்ந்து ஓர் நல்ல முடிவுக்கு வந்திருக்கின்றனர்.

0 0 0

திருச்சி உடையார் பாளையம் தாலுக்கா ஆண்டிமடம் என்ற கிராமத்தில் 10-ம் நம்பர் கள்ளுக்கடை முன் காங்கிரஸ் தொண்டர்கள் அதிதீவிரமாக மறியல் செய்ததால் மேற்படி கடை மூடப்பட்டுவிட்டது.

0 0 0

வாகூருக்கருகிலுள்ள பிரோல் பூரைச் சேர்ந்த மெஸர்ஸ் தௌலத்ராம் வித்யா பிரகாசர் என்னும் துப்பாக்கி மருந்துக் கம்பனியிலிருந்து 2558 தோட்டாக்கள் களவுபோய்விட்டன. இது சம்பந்தமான புலன் ஒன்றும் தெரியாததால் மானேஜரைக் கைது செய்து வைத்திருக்கின்றனர்.

0 0 0

திருநெல்வேலியில் ஜூன் 12-ந் தேதி ஓர் கல்யாணஊர்வலம்வந்துகொண்டிருக்கும் போது கொழுத்தப்பட்ட ஒரு குடிமாய் வாணம் தவறிக் கூட்டத்தில் விழுந்ததால் மூவர் மாண்டனர். பலர் மூர்ச்சையாகிக் கீழே விழுந்தனர். 50 பேர் வரை காயமேற்றனர்.

0 0 0

திரு. டி. பிரகாசம், சுயராஜ்ய பத்திரிக்கைக்குப் பண ஆதரவு தேடுவதற்காக எர்ணா குளத்திற்குப் போய் தலைவர்களையும் வியாபார பிரமுகர்களையும் கண்டு பேசினார். திருப்பூரில் அவர் காங்கிரஸ் தொண்டர்களுக்கு அவர்கள் தேசத்திற்கு செய்ய வேண்டிய கடமைகளைப்பற்றி ஒரு பிரசங்கம் செய்தார்.

0 0 0

ஐக்கிய மண்டல சர்க்கார் கிஸ்வரியை வஜா செய்ததால் 68லட்சம்ரூபாய் நஷ்டமேற்பட்டிருக்கின்றது. இன்னும் வஜா செய்ய வேண்டிய கிஸ்திகளையும் சேர்த்துப்பார்த்தால் நஷ்டமும் ஒரு கோடிக்கு மேற் போய்விடுமென்று தெரிகிறது. ஆகவே சிக்கனமுறைகளை கையாட முயல்கின்றார்கள். பெரும்பாலும் பிரயாணப் படியையும் சம்பளவிகிதங்களையும் குறைக்கலாம்.

0 0 0

பாஞ்சால கவர்னரை சுட்டுக்கொல்ல முயன்றதற்காக ஹரிகிருஷ்ணர் சென்ற வாரம் தூக்கிலிடப்பட்டார். இதனைக் கண்டித்து லாகூரில் ஹர்த்தாலும் ஊர்வலமும் நடைபெற்றன. பெஷாவாரிலும் அவ்வண்ணமே ஹர்த்தால் பிரசங்கங்கள், ஊர்வலங்கள் முதலியன நடைபெற்றன. சர்க்கார் 144 ஆம் தடை செய்தனர். அதனைமீறி கூட்டம் கூட்டியதற்காக 20 பேர்கள்கைது செய்யப்பட்டிருக்கின்றனர்.

0 0 0

மங்களூரில் ஜெயின் வகுப்பைச் சேர்ந்த ஒரு 15 வயது பெண்ணுக்கும், சிரிங்கேரி பர்மாராஜாவின் 15வயதன்புதல்வனுக்கும் சென்ற மே29ந் தேதி விவாகம் நிச்சயிக்கப்பட்டு நடத்தப்பெறும் போது பெண் மாமன் சாரதா ஆக்டுப்படி மாப்பிள்ளை வயதைப்பற்றி ஆக்ஷேபித்துக் கோர்ட்டார் மூலம் தடையுத்தரவு வாங்கியிருந்தார். இப்போது தருமத்தைப்பற்றி அப்பால் யோசிப்பதென்று பெண் புருஷனுடைய இருதரப்பினரும் சமாதானமான முடிவுக்கு வந்திருக்கின்றனர்.

0 0 0

கிரேட் பிரிட்டனுக்கு அனுப்பப்படும் ஆகாய விமானத் தபால்களில் தபால் கார்டு ஒன்றும் ஏற்படுத்த இந்தியா கவர்ன்மெண்டார் முடிவு செய்திருக்கிறார்கள். மொத்தம் அந்தக் கார்டுக்கு 4 அணா செலவாகும். இதில் சாதாரண தபால் கட்டணம் ஒன்றரை அணா ஆகாய விமானத் தபால் கட்டணம் இரண்டரை அணா. எல்லா தபாலாபீஸ்களிலும் இந்த போஸ்டுகார்டு 4 அணாவிற்கு கிடைக்கும். முன்னர் இந்த ஒன்றரை அணாவுக்கு வாங்கி இரண்டரை அணாவிற்கு நீலநிற தபால் முத்திரை வாங்கி அதில் ஒட்ட வேண்டியிருக்கும்.

திரு. எம். ஏ. ஜின்னா சென்ற சீமை தங்களாக இங்கிலாந்திலேயே தங்கி இருப்பவர் இந்தியாவுக்கு வர மறுத்துவிட்டார். வருகிற ஆகஸ்டு மாதம் பம்பாய்க்கு வருவார்.

0 0 0

தஞ்சாவூரிலுள்ள ஏர்வாடி சேர்மாத்தியிருக்கும் திரௌபதி அம்மனுக்கு, கிராம கூடுகளுக்குள் சச்சரவிருக்கும் வரையில் திருவிழா நடத்தக் கூடாதென்று 144 பிரயோகிக்கப்பட்டிருக்கிறது.

0 0 0

பூதலூர் ரயில்வேஸ்டேஷனுக்கு எதிரேயுள்ள ஒட்டர்கள் குடிஸ்களியுள்ள ஒருவன் ஏழாந்தேதி காலையில் இஞ்சின்களிலிருந்து சாம்பல் தள்ளும் குழியில் தண்ணீர் இருந்தால் கால்கள் சுத்தம் செய்ய இறங்கி சிறிது நேரத்துக்குப் பிறகு வெளியே தலையை நீட்ட திருச்சியிலிருந்து வரும் ரயில் விரைந்து வந்ததால் தலை நெறிப்போயிற்று.

0 0 0

இரு மோட்டார் சாக்கள் இரவில் சந்திக்கும்போது வெளிச்சத்தை கட்டுக் குறைத்து ஒருவருக்கொருவர் நின்று செல்லும் வழக்கத்தை சென்னை போலீஸ் கமிஷனர் கண்டித்து ஓர் உத்தரவு பிறப்பித்திருக்கிறார். திடீரென்று வெளிச்சத்தைக் கூட்டுவதும் குறைப்பதும் எதிரே வரும் டிரைவரின் பார்வையைக் கெடுக்குமென்பது அவரது அபிப்பிராயம்.

0 0 0

நாகபுரிக்குச் சமீபம் பார்தி என்ற கிராமத்தைச் சேர்ந்த 100 கல் தச்சர்கள் பரம்பரை மதமாகிய ஹிந்து மதத்தை விட்டு மகமது மதத்தைத் தழுவிக்கொண்டனர் இன்னும் 200 பேர்கள் பேசிக்கொண்டிருப்பதாகத்தெரிகிறது. இவர்களுடையமத மாற்றத்திற்கு காரணம் ஜாதிக்கொடுமையாம். உயர்ந்த ஜாதியார் இவர்களோடு முதலியவற்றைத்தொடச்சம்மதிப்பதில்லையாம்.

0 0 0

ஜூன் 14-ம் தேதி இரவு மின்னலும் இடிமுழக்கமும் மிகுதியாகி சுமார் 7-30 மணிக்கு திருவல்லிக்கேணி பெரிய வீதியிலுள்ள மிஞ்சட் என்று சொல்லப்படும், கலசகோபுரத்தின் பேரில் ஒரு பலத்த இடிவிழுந்து கோபுரத்தின் உச்சி பாகத்தில் மிகுந்த சேதம் ஏற்பட்டது. அக்கம் பக்கத்திலுள்ள கட்டிடத்தில் அநேக ஜனங்களிருந்தார்கள். இடிவிழுந்த சப்தத்தைக் கேட்டு அவர்கள் திகைக்கமுற்றனர். இந்த கோபுரம் கட்டி நூறு வருஷங்களுக்கு மேலாகிறதாம்.

## விவாக ரத்துரிமை.

### பரோடாவின் தீர்மானம்.

ஹிந்துக்களில் உயர்ந்த ஜாதியார்களுடைய விவாக வாழ்க்கையைப் பற்றி விசாரணை செய்வதற்காக ஓர் கமிட்டி நியமிக்கப்பட்டிருந்தது. அக்கமிட்டி சிபார்சுசெய்ததின் பேரில் அரசருடைய சம்மதத்தோடு ஓர் மசோதா நிறைவேற்றப்பட்டிருக்கின்றது. அமசோதாவின்படி புருஷனோ அல்லது மனைவியோ சட்டத்தில் காணுமாறு தீராத நோய்க்குஆளாகியிருந்தால் அத்தகையோர்விவாக ரத்து செய்து கொள்ளவோடுவிவாக ரத்துத்தீர்ப்புக் கூறப்பட்ட ஆறு மாதத்திற்கு பிறகு வேறு கல்யாணமும் செய்து கொள்ளலாம். அன்றி புருஷனோ பெண்ணோ காணாமற்போய் 7 வருஷங்கள் ஆகிவிடுமானாலும், அல்லது மற்றொரு மதத்திற்கு மாறிவிட்டாலும், சந்நியாசி யாகிவிட்டாலும், 3 வருஷத்திற்குக் கொடுமையாய் நடந்துகொண்டாலும், அல்லது குடிமுதலிய தீயப் பழக்க முடையவராயிருந்தாலும், கர்ம வியாதியால் பிடிக்கப் பட்டிருந்தாலும், மோசடியாக விவாகம் நடந்திருப்பதாய் நிரூபிக்கப் பட்டாலும் உடன் விவாகத்தை ரத்து செய்து வேறு மணம் செய்து கொள்ளலாமென்றும் அச்சட்டம் கூறுகிறது.

---

## மந்திரியின் சூதாட்டமும் மோட்டாரின் திண்டாட்டமும்

பிரேகு தேசத்தின் மாஜிமந்திரியாகிய ஸ்ட்ரிபர்ணி என்பவர் ஸீக்கோ ஸ்லோவோகியாவின் மந்திரியாகவிருக்கின்றார். அவர் ஓர் பெரிய சூதாடி. ஒரு நாள் மாலையில் உலாவப் புறப்பட்ட காலையில் வழியில் ஓர் தோட்டத்தில் சிலர் சீட்டாடியதைக் கண்டார். உடன் அவருக்கு அடக்க முடியாத ஆசை பொங்கியதால் தன் பெயரைக்கூறாது அவர்களோடு சேர்ந்து கொண்டார். கொஞ்ச நேரம் சீட்டாடவே அவர் தம் கையிலிருந்த பணத்தையும் ஸ்டேட் மோட்டாரையும் ஈடு வைத்துத் தோற்றுவிட்டார். எனவே அடுத்த நாள் தன் காரியதரிசியை அனுப்பிக் காரை மீட்கவேண்டி வந்தது.

---

## அடக்குமுறை தலை எடுக்கின்றது.

இன்னும் 2 மாத காலத்திற்கு திருத்தணி எல்லைக்குள் கள்ளுக்கடை மறியல் செய்யக் கூடாதென்று 144-வது பிரிவின்படி சர்க்காரர் ஒரு உத்தரவு பிறப்பித்திருக்கிறார்கள்.

---

## விசாகத் திருவிழா.

ஈப்போ 4-6-31.

இவ்வூர் வைகாசி விசாகத்திருவிழா மிகச் சிறப்பாக நடைபெற்றது. திருவிழா நாளிது வைகாசி மாதம் 18உ இரவு தொடங்கப்பெற்றது. பிற ஊர்களிலிருந்து நகரத்தார் பலர் வந்திருந்தனர். 19உ சனிக்கிழமை பகல் 11 மணிக்கு ஆரம்பித்து சுமார் 3 மணி போது முடிவெய்தியது. ஏராளமான ஜனங்கள் சுவாமி தரிசனத்துக்கு வந்திருந்தனர். விசாகத்தன்றும் மறுநாளாகியஞாயிற்றுக்கிழமையன்றும்ஏராளமான ஜனங்களுக்கு உணவளிக்கப்பட்டது.20உஞாயிற்றுக்கிழமைஇரவு 7-30 மணிக்கு மேளம், பாண்டு முதலியவைகளுடன் சுவாமி புறப்பட்டு ஊர்வலமாக வந்து சுமார் 10 மணிக்கு சேர்க்கைக்கு வந்து சேர்ந்தது: அவ்வமயம் நகரத்தார் வீதியிலுள்ள வீடுகளெல்லாம் மிக அழகாக அலங்கரிக்கப்பட்டிருந்தன.

---

## 5 ஆயிரம் மைலுக்கு 8 படிகள்.

### ஆகாயக் கப்பல்கட்கு அபாயமின்மை.

சென்றவாரம் இங்கிலாந்துக்கும் அமெரிக்காவுக்கும் ஒரு உடன் படிக்கை நடந்தது. அதன்படி இருதேசத்தாரும்அத்லாந்திக்மகாசமுத்திரத்தில் அதாவது இங்கிலாந்துக்கும் அமெரிக்காவுக்கும் இடைப்பட்ட கடலில் (சுமார் 5000 மைல் அகல முள்ளது) 8 கடல் நிலையங்கள் கட்ட இசைந்துள்ளாராம். நிலையங்கள் பெரும் கப்பல் போன்ற வைகளாயிருக்கும். அவையொவ்வொன்றும் கடல் மட்டத்திலிருந்து 130 அடி உயரமும் 1100 அடி நீளமும் 350அடி அகலமும்இருக்கும். இவைகள் கேபிள்களினுதவியால் பெரிய "போய்" களில் இணைக்கப்படலாம். ஒவ்வொரு "போயும்" சிமண்டைத் தோணிகள் போல் செய்து அந்த சிமண்டுத் தோணிகளை கடலுக்குள் மூழ்கவிட்டு அவற்றில் பிணிக்கப்படும்.இந்தக்கடல்நிலையங்களைக்கட்டும் வேலையை கனேடியன் இஞ்சினீயராகிய மிஸ்டர் இ. ஆர். ஆரம்ஸ்ட்ராங் என்பவர் ஒப்புக்கொள்ளுவார். இந்த நிலையங்கள் காற்றில் அசைந்து கொண்டே யிருக்கும். முதலாவது நிலையம் ந்யூயார்க்குக்கும் பர்முடாவுக்கும் இடையில் வைக்கப்படும். பரிசோதனைக்கு இதனையே உபயோகிப்பார்கள்.

இந்நிலையங்கள் ஒவ்வொன்றிலும் தினசரி 10 ஆகாயவிமானங்கள்அங்கு மிங்கும் சடந்து செல்லும். இவை 18 மாதங்களுக்குள் தயார் செய்யப் பட்டுவிடுமென்று தெரிகிறது.

---

## ஆணுக்கு "நாயகன்" பெண்.

ருஷியாவிலுள்ள ஆஜர் பெயஜான் என்ற பகுதியில் ஆண்கள் நமது நாட்டுப் பெண்களைப்போலவும் பெண்கள் நமது நாட்டு ஆண்களைப் போலவும் வாழ்க்கை நடாத்துகின்றனர். புருஷர்கட்காகப் பெண்கள் போராடுகின்றதோடு வெளியேசென்று தொழிலும் நடத்துகின்றார்கள். அவர்கள் எவ்விதத்திலும் புருஷர்களுதவியை நாடுவதில்லை. புருஷன் தமக்கு உதவி செய்வதைக் கேவலமாக மதிக்கின்றனர். அவன் வீட்டிலேயே இருந்து வாழ்க்கை நடத்தவேண்டும். புருஷனைத் தேர்ந்தெடுக்குமுரிமை பெண்களுக்கே உண்டு. தம் பார்வையைவிட்டு வெளியிலெங்கும் செல்லாதபடி பார்த்துக் கொள்ளப்படுகின்றது. கணவனுடன் வாழ்ந்து சலிப்படைந்துவிட்ட பெண்கள் இருவரை சாக்ஷியாக வைத்துக் கொண்டு புருஷனைப் பார்த்து "என்னைவிட்டுப் போ, போ" என்று மும்முறை கத்துகின்றார்கள். உடன் அவன் போய்விடுகின்றான். புருஷர்கள் பிறநாட்டில் பெண்களுக்குச் செய்கின்ற கொடுமைக்கு பதில் ஆஜர் பைஜானில் நடக்கின்றது போலும்.

---

## உலகிற்கே உப்பையளிக்கும்.

சிந்து தேசத்திலுள்ள பல ஏரிகள் உப்பெடுப்பதற்கும் காய்ச்சுவதற்குமாக துறந்து விடப்பட்டிருக்கின்றன. தார் ஜில்லாவும் பார்கார் ஜில்லாவும் இவ்வாறு துறந்து விடப்பட்ட இடங்களாம். இவ்விரண்டு ஜில்லாக்களுக்கும் உலகம் முழுதுக்கும் எத்தனை நூற்றுண்டுகள் வேண்டுமாயினும் உப்புக்கொடுத்துதவமுடியும்.





## காணாத கண்கள்.

### புகைப்படத்தில் அதிசயம்.

200 மைலுக்கப்பா லிருப்பதை படம் பிடிக்கலாம்.

ஐக்கிய நாடுகளிலுள்ள கப்பல் காரர்கள் கண்ணுக்குத் தென்படாத பல பொருள்களை படம் பிடிக்கத் தகுந்த ஒரு "காமரா" வை (புகைப்படக்கூட்டை) கண்டு பிடித்திருக்கின்றார்கள். 200 மைல் களுக்கப்பாலிருக்கும் பொருளைக் கூடப்படம் பிடிக்கும் சக்தி யுண்டாம். ஆகவே யுத்தகாலங்களில் இந்த காமரா உபயோகிக்கப் படுமென்று தோன்றுகிறது. ஆகாயத்தில் விமானங்களில் மறைந்திருந்து போர்செய்கின்றஎத்தனையோ விமானங்களை எளிதில் கண்டுவிட முடியும். சமீபத்தில் அமெரிக்க ஆகாயப்படையைச்சேர்ந்த காப்டன் ஏ. டப்ளியூ ஸ்டீவென்ஸ் என்பவர் 17000 அடி உயரத்தில் பறந்து கொண்டிருக்கும் போது 227 மைல்களுக்கப்பாலிருக்கின்ற மௌண்டு ரயினியரைப் புகைப்படம் பிடித்தாராம். ஸாண்டியாகே, என்ற விடத்திலும் இந்தக் காமராவை உபயோகப் படுத்தி 175 மைலுக்கப்பாலிருந்த ஒரு பொருளை போட்டோ வெடுத்தார்களாம்.

---

## காத்திஜிக்குக் கொடும்பாவி.

கதர் உற்பத்திக்கு தலை சிறந்து நிற்கும் திருப்பூரில் மகாத்மா காந்திக்கு ஓர் கொடும்பாவி கட்டி இழுத்தார்கள் என்று மெயில் பத்திரிகை எழுதுகிறது.

---

## ஆந்திர நாட்டில் பார்ப்பனரல்லாதார் உணர்ச்சி.

சென்னையில் உள்ள ஆந்திரஜில்லா காங்கிரஸ் கமிட்டிக்கு திரு. ஜி. ரங்கய்யநாயுடு அவர்களைத் தலைவராக பிரேரேபித்தபோது அவர் தனக்கு அப்பதவி வேண்டியதில்லை என்று மறுத்து விட்டாராம். காரணம் கேட்டபோது "ஆந்திர மாகாண காங்கிரஸ் பார்ப்பன ஆதிக்கத்தில் இருக்கிறது. இதில் தலைமை ஸ்தானம் வகிப்பதில் பயனில்லை. மேலும் எனது பார்ப்பனரல்லாத நண்பர்கள் ஜில்லா காங்கிரஸ் தலைமைப் பதவியை ஒப்புக்கொண்டு பார்ப்பனர்கள் கை ஆயுதமாக இருக்கக் கூடாதென்றும், பார்ப்பனர்கள் பார்ப்பனரல்லாதாரின் சுயமரியாதைக்கு விரோதமாய் இருக்கின்றார்கள் என்றும் எனக்கு எச்சரிக்கை செய்திருக்கிறார்கள்" என்று சொன்னாராம். இதன் பிறகு திருவாளர் கே. நாகேஸ்வரராவால் சமாதானம் சொல்லப்பட்டதுடன் விஷயங்களை கவனித்து நேர் செய்வதாக சொன்னபிறகு ஏற்றுக் கொண்டார்.

---

## சென்னை மாகாண முகமதியரல்லாதார் மகாநாடு

ஜூலை மூன்றுவது வாரம் திருச்சியில் நடைபெறும்

21—6—31 ல் வரவேற்புக் கமிட்டிக் கூட்டம் கூடும்.

திருச்சி, ஜூன், 13-உ

சென்னை மாகாண முகமதியரல்லாதார் மகா நாட்டை திருச்சியில் நடத்துவதற்குப் பூர்வாங்கமான ஏற்பாடுகள் நடந்து வருகின்றன. மகாநாடு ஜூலை மாதம் மூன்றுவது வாரத்தில் நடைபெறும். இதன் வரவேற்புக்கமிட்டிக் கூட்டம் 21—6—31 ஞாயற்றுக்கிழமை கூடுகிறது. தலைவர் முதலியோரை அக்கூட்டத்தில் தேர்ந்தெடுப்பார்கள்.

---



## செட்டியார்களுக்குப் பயமுறுத்தல்.

பக்கோவில் 25-ந் தேதிக்கு முன்னதாக சிவில் மாஜிஸ்திரேட் கோர்ட்டில், கொள்ளைக் கூட்டத்தலைவன் எனக் கையொப்பமிட்ட மொட்டை விளம்பரங்கள் ஒட்டப்பட்டிருந்தன. அதில் "செட்டியார்கள் மிதமிஞ்சிய அக்கிரமத்தில் இறங்கிவிட்டார்கள். 23-ந் தேதிக்குப் பின் செட்டியார்களின் தலைகளைக் கொண்டுபோவதற்காகவே கொள்ளைக் கூட்டத் தலைவருள்பட இருபத்தைந்து பேர்கள் வந்திருக்கின்றோம். இன்று முதல் நாள் ஒன்றுக்கு ஆறு தடவை தலைகளைத் தடவிப்பாருங்கள். இனி எக்காரணத்தை முன்னிட்டும் செட்டியார்கள் இங்கு வசிப்பதற்குச் சம்மதிக்கமாட்டோம். உயிர் தப்பி ஓடிவிடுங்கள்" என்று வரையப்பட்டிருந்ததால் அந்த எச்சரிக்கை விளம்பரங்கள் போலீஸாரால் கைப்பற்றப்பட்டு, செஷனுக்கு அனுப்பிவைக்கப்பட்டிருக்கிறது.

### அரசாங்க அறிக்கை.

ஓர் அரசாங்க அறிக்கை, "இந்தியருக்கு விரோதமான கிளர்ச்சி முதலில் பக்கோவிலும், தௌங்கோவிலும் ஆரம்பித்து ஹந்தவாடிக்குப் பரவிவிட்டது. இது பெரும்பாலும் பொருளாதாரக் காரணமானது. இந்தியா குறைந்த சம்பளம் பெற்று, விவசாய நிலங்களுக்கு அதிகக் குத்தகை செலுத்த இசைவதால், அவர்களுடன் போட்டி போடவேண்டியிருப்பது பர்மாகாரர்களுக்கு ஆத்திர முண்டாக்கியிருக்கிறது. பக்கோவிலும், தௌங்கோவிலும் இவ்வுணர்ச்சி வெளிவராமல், சர்க்கார் நடவடிக்கைகளால் நிறுத்தப்பட்டுவிட்டது. ஹந்தவாடி, பியாப்போன் நிலைமையும் சாந்தப்பட்டு விட்டதாகச் சமீபச் செய்தி கூறுகிறது. இந்நாட்டிலுள்ள இந்தியரை பாதுகாக்க அரசாங்கத்தார் தங்கள் சக்திக்கு முடிந்த நடவடிக்கைகளை யெல்லாம் எடுத்துக் கொள்ளுவார்கள். இன்னும் கொடுமைகள் நடக்குமானால் அவை நடக்கும் கிராமங்களுக்கு தண்டனை வரியும் போடும் நிர்பந்தம் ஏற்படும். விவசாய சம்பந்தமான சட்டத்தை ஆராயவும் அரசாங்கத்தார் உத்தேசித்துள்ளார்கள். ஆனால் அது பற்றித் திட்டமான முடிவு எதற்கும் வரச்சிறிது காலமாகும்."

### செட்டியார் வீடும் தாக்கப்பட்டது.

ஹென்ஸாடாவில் மே மாதம் 28ந் தேதி இரவு 19-மனிதர்கள் அப்பியாக்கில் கொள்ளையடித்ததாகச் செய்தி எட்டுகிறது. ஒரு செட்டியார் வீடு உள்பட எட்டுவீடுகள் கொள்ளை யடிக்கப்பட்டன. கொள்ளை யடிக்கப்பட்ட பொருள்மதிப்பு ரூ 10,000. அதே ஜில்லாவில் அதே இரவில் வேறிரண்டு இடங்களிலும் கொள்ளைகள் நடந்தன. தாராவாடியில் முந்திய இரண்டு தினத்தில் நான்கு கொள்ளைகள் நடந்திருக்கின்றன. இன்சீன் ஜில்லாவில் சமீபத்தில் மூன்று கொள்ளைகள் நடந்தன. பாசினியில் 30 பேர் எட்டு வீடுகளில் ரூ 1000 மதிப்புடைய நகைகளைக் கொள்ளையடித்தார்கள். தாயிட்மோவில் சிறு கொள்ளைகள் நடந்தன. மியாங்மியா, கியைக்பியி ஆகியவிடங்களில் வகுப்புவிரோதம் இருக்கிறது. வைக்கோற்போர்களை அங்கே எரித்தார்கள். இந்தியர் வாத்து, பத்திரங்கள் ஆகியவற்றைத் திருடுகிறார்கள்.

### தனவணிகருக்குச் சில யோசனைகள்

பர்மாவில் தற்பொழுது நாட்டுக்கோட்டைச் செட்டியாருக்கு ஏற்பட்டிருக்கும் சிரமத்தைப்பற்றி அனுதாபத்துடன் நோக்கும் "சுதந்திரன்" பத்திரிகை இந்நெருக்கடியைச் சமாளித்துக்கொள்ளத் தனக்குத் தோன்றும் சில யோசனைகளைக் கூறியுள்ளது. அவையாவன:— "முதலாவதாக, இவர்கள் பாங்கிகளில் பெற்ற கடன்களைச் செலுத்தாது ஏக முகமாகக் கட்டுப்படுத்திவிட வேண்டும். மீறினால் தங்களிடமுள்ள தஸ்தாவேஜிகளை அந்தப் பாங்கிக்காரர்களிடம் ஈடு காரணமாக ஒப்படைத்துவிடலாம். வேறு வழி யில்லாததால் அவர்களும் ஒத்துக்கொள்ளவே செய்வர். காளடவில் தங்களுக்கு வரவேண்டிய கடன்களை வசூல் செய்து தாங்கள் பட்ட கடன்களைச் செலுத்திவிடலாம். இரண்டாவதாக, தங்கள் தொழிலை வேண்டியவாறு குறைத்துக் கொள்ள வேண்டும். மூன்றுவதாக, தங்கள் கைவசமுள்ள விவசாய நிலங்களை இந்திய விவசாயிகளுக்கே சேவாயிற்கு ஒப்படைக்கவேண்டும். அதிக லாபங் கருதாது வட்டிக்குக் கட்டினால் போதுமென்ற மனோபாவத்துடன் குறைந்த சேவாயிற்கு

## பர்மாவில் கொலையும் கொள்ளையும்.

### செட்டியார் தலைக்கு ஆபத்து.

பெண்களும் கொள்ளை செய்கின்றனர்.

கலவரத்துக்குக் காரணம் பொருளாதாரமே.

விட்டு அவர்களுக்குப் பயிர்ச் செலவிற்கான சொற்பப் பணமும் கொடுத்துதவ வேண்டும். இன்னோரன்ன வழிகளில் நமது தனவைசிய மக்கள் தங்கள் நிலையை சிறிது சரிப்படுத்திக்கொள்ளலாம். இது சம்பந்தமாக ஆழ்ந்த கவனம் செலுத்துவரென நம்புகிறோம்".

### கணக்குப் பிள்ளைக்கு வெட்டு.

"சுதந்திரன்" பத்திரிகைக்கு ஒரு நிருபர் சொல்லிய தந்தி வருமாறு:— "அவுக்கான் பி. சு. நா. கடையிலிருந்த சுமார் 20 வயதுள்ள நடராஜன் என்ற கணக்குப் பிள்ளையும் மேற்படியூர் சி. ராம. கதி. கடையிலிருந்த சுமார் 22 வயதுள்ள திரு. ச. சீனிவாசகனென்ற கணக்குப் பிள்ளையும் மேற்படி யூரைச் சேர்ந்த பவுக்கோம் என்ற ஊரில் பர்மிய மாசுவேமி இடம் மார்க்கிஸ் நிலத்துக்கு வரிகட்டப்பணம் கேட்க ஒருநாள் மாலை சுமார் 5 மணிக்குச் சென்றனர். அங்குச் சென்று கேட்டதில் மேற்படி மாசுவேமி மகள் மாத்தீங்லாயிங் என்றவள் திரு. ச. சீனிவாசகனென்ற கணக்குப்பிள்ளையை மண்டையில் அரிவாளால் தாக்கியதால் காயமுண்ட அவர் தக்கி ஆஸ்பத்திரியில் சிகிச்சை செய்யப் பட்டு வருகிறார்"

### பிரிட்டிஷ் சர்க்கார் அறிக்கை.

பர்மாக் கலக சம்பந்தமாக மே-மீ 30 யோடு முடிவான வாரத்தில் பர்மா நிலைமையைப்பற்றி ஜூன் மீ 3 உ காமன்ஸ் சபையில் பிரிட்டிஷ் சர்க்கார் ஓர் அறிக்கை வெளியிட்டனர். அதன் சாரமான பகுதி வருமாறு:— பொருளாதார நிலைமை சம்பந்தப்பட்டவரையில் எண்ணெய் தவிர மற்றெல்லாப் பொருள்களின் விலையும் குறைந்திருப்பது ஒரு பெரிய விசேஷமாகும். நெல்லு, கொள்ளு முதலியவற்றின் விலை சென்ற வருஷ மிருந்ததை விட இப்பொழுது 100 க்கு 50 விகிதம் குறைந்திருக்கிறது. உலோகங்கள், மாம் முதலியவற்றின் விலை 100 க்கு 35 விகிதம் குறைந்திருக்கிறது. விவசாயிகள் கடனுக்காக அரசாங்கத்தார் மற்றும் 20 லட்சம் ஒதுக்கியிருக்கின்றனர். நிலம் சாகுபடி யாகாததினால் வேலையில்லாக் கஷ்டம் கடுமையாகப் போய்க்கொண்டிருக்கிறது. இந்நிலைமை சர்க்காரால் தீரப் பரிசீலனை செய்யப்பட்டிருக்கிறது. அரசாங்கக் கோஷ்டியில் கொல்லப்பட்டவர்களில் இருவர் ராணுவப் போலீஸார் 9 ஸிவில் போலீஸார் இறந்தனர். மற்ற அரசாங்க உத்தியோகங்களைச் சேர்ந்த 27 பேர்கள் கொல்லப்பட்டனர். கிராமத் தலையாரி 12 பேர்கள் கலகத்தில் இறந்தனர். கொள்ளைகளில் இறந்த கிராமத்தினர் தொகை தெரிய வில்லை. கலகக்காரர்களில் எவ்வளவு பேர்கள் இறந்தனரென்பதும் தெரியவில்லை. ஆனால் இது அதிகமிருக்குமெனத் தெரிகிறது."



## பலவிடங்களில் கொலையும் கொள்ளையும்.

ஜூன் மாதம் 5ந்தேதி காப்டன் வேன் தலைமையில் சென்ற பஞ்சாப்படையினர் கலகக் கூட்டத்தாரை வளைத்துக் கொன்ன சுமார் 100 பேர் கொல்லப்பட்டும் காயமடைந்தும்போயினர். வெட்டோ என்ற விடத்தில் கலகக்காரர்கள் முகாம் போட்டிருந்தனர். அங்கு 300 பேர் ஆயுதபாணிகளாக விருந்தனர். சிக்கிரத்தில் அவர்கள் அடக்கப்பட்டனர். 21 பிரேதங்கள் அங்கிருந்து எடுத்து வரப்பட்டன. தலைவனின் பிரேதமுமிருந்தது. சர்க்கார் பக்கத்தில் நஷ்டமில்லை. டாங்கூ ஜில்லாவில் ஒரு இந்தியரின் குடிசை கொள்ளையிடப்பட்டுக் கொளுத்தப்பட்டது. சேனர் ஒருவர் வீடும் கொள்ளையிடப்பட்டது. அங்கிருந்தவர்கள் கத்தியால் காயப்படுத்தப் பட்டனர். ஒருவருக்குக் குண்டுக்காயமும் பட்டது. தாராவாடிக் கருகிலுள்ள ஒரு கிராமத்தில் கொள்ளையும் கொலையும் நடந்ததாகச் செய்தி எட்டுகிறது. ஹென்ஸாடாவில் இரண்டிடங்களில் கொள்ளை நடந்ததாகத் தெரிகிறது. காப்டன் கோர் போலீஸ் சூப்பரின்டெண்டோடு வெட்டிகான் என்ற ஊருக்கு 4ந்தேதி சென்றார். அங்குச் சுற்றுப் பக்கங்களிலிருந்த கிராமங்களுக்கும் அவர் சென்று பார்த்தார். ஒரு கிராமத்தில் ஆட்கள் நடமாட்டமேயில்லை. ஜூன் மாதம் முதல் தேதி இக்கிராமங்களில் ஒன்றில் கலகக்காரர்களோடு சச்சரவு நடந்தது. அங்கு, பிறகு 6 பிரேதங்கள் பொறுக்கி யெடுக்கப்பட்டனவாம். குன்யா கிராமத்தில் பண்டசாலைகள் பாழ்படுத்தப் பட்டனவாம். பெகு ஜில்லாவில் ஒரு இந்தியர் கொல்லப்பட்டார். மற்றிருவர் கத்தியால் வெட்டப்பட்டனர்.

### 500 ரூ கொள்ளை.

ரங்கூன் ஜூன் 13

காக்கி டிராயர்களையும் சொக்காய்களையும் தொப்பிகளையும் அணிந்திருந்த 22 பர்மியர்கள் துப்பாக்கிகளுடன் ஒரு வீட்டில் 500ரூபா வரை கொள்ளையடித்ததாகவும் அணிகளைக் கொளுத்தி விட்டதாகவும் பேசின் செய்தி கூறுகிறது. மூன்று பேரைத் தூக்கிக் கொண்டுபோய் பிறகு விட்டு விட்டனர். 11-ந் தேதி இரவு ஏழு பர்மியர்கள் பியாபோனில் இந்திய வீடுகளைத் தாக்கி அவர்களுக்கு சிறு காயங்களை உண்டு பண்ணினர். சாயதாவியர்களுடன் கலந்து பேசியதன் சம்பந்தமாக 12-கலகக்காரர்கள் சரணுகதி யடைந்ததாக எனபுரோம் அறிவிக்கிறது. இன்னும் பலர் அப்படியே செய்வார்களென்றும் எதிர்பார்க்கப் படுகிறது. ஹந்தவாடியில் ஒரு இந்தியன் வீட்டை எதிர்த்த பத்து பர்மியர்களில் இருவர் கைது செய்யப்பட்டிருக்கிறனர். ஒரு இந்தியனுக்கு துப்பாக்கி குண்டால் காயம் ஏற்பட்டிருக்கிறது. சொத்து ஒன்றும் கொள்ளை போகவில்லை. பல கொள்ளைகள் நடந்ததில் சிலருக்குக் காயம் ஏற்பட்டிருப்பதாக இன்சீன் செய்தி கூறுகிறது. புரோமில் கலகக் காரர்களால் இரு கொள்ளைகள் நடந்ததாகவும் அவர்களை கிராமத்தார் எதிர்த்ததில் ஒரு தலைவன் கொல்லப்பட்டா னென்றும் தெரிகிறது. மாபின் தாராவாடியிலிருந்து கொள்ளைகள் நடந்ததாகவும் செய்திகள் கூறுகின்றன.

### சிறைமீண்டனர்.

இரங்கூன், ஜூன் 12

விசாரணைக்காக கியாங்கிளிபின்னில் வைக்கப்பட்டிருந்த வர்கள் திடீரென வெளியே வந்து, காவற்காரர்களை அடக்கிவிட்டு அங்கிருந்த பதினைந்து துப்பாக்கிகளையும் எடுத்துக் கொண்டு ஒருமலைக் குன்றைப் பார்க்கச் சென்று விட்டார்களென்ற செய்தி யெட்டுகிறது.

### மற்றேரு விவரம்.

இரங்கூன், ஜூன், 13

தப்பியோடியவர்கள் பதினொரு ஆடவர்களும் ஒரு பெண் பிள்ளையும் என்று ஒரு செய்தி கூறுகிறது. போலீஸ் ஸ்டேஷனை சப் ஜெயிலாக மாற்றப் பட்டிருந்ததால் இங்கிருந்த இருபத்தைந்து துப்பாக்கிகளையும் 807 சுற்றுக்கு வரக் கூடிய வெடிமருந்தையும் தூக்கிச் சென்றனர்.

அலோவிலியேட்டட் பிரஸ் நிருபர் கியாங்கிளிபின்னில் விசாரித்த போது மேற்கண்ட விபரம் கிடைத்தது. கொள்ளையடித்த வழக்கில் குற்றம் சாட்டப்பட்டு 12-ந் தேதி மாஜிஸ்திரேட்டு கோர்ட்டிலிருந்து

(12-ம் பக்கம் பார்க்க.)

# குமரன்

காரைக்குடி

பிரஜோற்பத்தி ஞு ஆனிமீ ௪௨


## பாட்டியாலா வெடிகுண்டு.

லண்டனில் இரண்டாவது வட்டமேஜை மகாநாடுகூடும் காலத்தைப் பற்றி முதலில் சந்தேகம் இருந்து வந்தது. 1932ல் கூடப்போவதாக ஒரு வதந்தி கிளம்பியவுடன் இந்தியாவில் பெரிய பரபரப்புண்டாயிற்று. கடைசியாக இவ்வருஷ செப்டம்பரில் கூடப்போவதாக உறுதியான செய்தி வெளிவந்ததும் அரசியல் உலகத்திலே ஒருவாறு அமைதி நிலைபெற்றது. அப்பால் மகாத்மா லண்டன் செல்வாரா மாட்டாரா என்ற கேள்வி பிறந்தது. கூர்ஜரவிவசாயிகளின் குறைகள் பரிகரிக்கப்படாமலும் ஹிந்து-முஸ்லீம் பிரச்சினை இந்தியாவிலேயே முடிவு பெறாமலும் லண்டன் சென்று பயனில்லையென்று மகாத்மா முதலில் கூறினர். ஆகவே அந்த இரண்டு நிபந்தனைகளும் பூர்த்தியாகாமல் இருக்க சர்க்கார் குட்டித் தெய்வங்கள் சூழ்ச்சி செய்தன—செய்கின்றன. காந்தி—இர்வின் ஒப்பந்த நிபந்தனைகளை நிறைவேற்றி வைக்க மத்திய சர்க்கார் உண்மையான கவலை யெடுப்பதாய் மகாத்மாவே ஒப்புக்கொண்டிருக்கிறார். மாகாண சர்க்கார்கள் தான் சில இடங்களில் தயங்குகின்றனர். வைஸ்ராய் நீங்கலாகவுள்ள சிம்லா தெய்வங்களுக்கு காந்தி—இர்வின் ஒப்பந்தம் ஆதிகால முதற்கொண்டே திருப்தியளிக்காதிருப்பது உலகம் அறிந்த ஒரு உண்மை. மகாத்மா லண்டன் செல்ல வொட்டாமல் தடுத்து இந்திய அரசியல் முன்னேற்றத்துக்கு முட்டுக்கட்டை போடவேண்டுமென்பதே பிற்போக்காளர் அந்தரங்க எண்ணம். ஆகவே மகாத்மா கூறிய நிபந்தனைகள் நிறைவேறுவண்ணம் தடுக்க அவர்கள் திரை மறைவில் சூழ்ச்சிகள் செய்தது ஆச்சரியமன்று. நல்லெண்ணத்துடன் தாம் கூறிய அபிப்பிராயங்களை எதிரிகள் தமக்கு அனுகூலமாக்கிக்கொள்ள முயற்சி செய்வதை மகாத்மாவும் உணர்ந்திருக்கக் கூடும். ஆகவே சென்ற வாரத்தில் பம்பாயில் கூடிய காங்கிரஸ் காரியக்கமிட்டிக்கூட்டத்தில், இதரவிஷயங்கள் திருப்திகரமாக இருந்தால் மகாத்மா லண்டன் மகாநாட்டுக்குச் சென்று இந்தியர் கோரிக்கையை வற்புறுத்தித் தீரவேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டுவிட்டது. மகாத்மா இன்னும் ஒருபடி கூட மேலே போய்விட்டார். ஐக்கிய சர்க்கார்கமிட்டியிலோ வட்ட மேஜை மகாநாட்டிலோ அல்லது இதர கமிட்டிகளிலோ பங்கு கொள்ளவும் தயார் என்று மகாத்மா கூறி விட்டார். யுத்தநிலைப்பைக் கைவிடக் கூடாதென்றும் எப்பொழுதும் போருக்குத் தயாராயிருக்கவேண்டுமென்றும் பொறுப்பற்ற குட்டித்தலைவர்கள் ஜனங்களைத் தூண்டிவந்தாலும் சட்டமறுப்புப் பிரம்மாவான காந்தி எப்படியாவது சமாதானத்தை உண்டு பண்ணி விடவேண்டுமென்று ஆத்திரத்திற் கொண்டிருப்பது புலனாகிவிட்டது. ஆகவே அவர் லண்டன் சென்றேதீர்வார். அவரது தற்கால மனப்போக்கைப் பார்த்தால் வீண் விவாதங்களைக் கிளப்பாமல் பிரிட்டிஷாரோடு சமரசம் செய்து கொள்ளக் கூடும் என்றும் தோற்றுகிறது. இத்துடன் லண்டன் மகாநாட்டைப் பிடித்திருந்த சனியன்களெல்லாம் ஒழிந்துவிட்டதாக இந்திய அரசியல் வாதிகள் ஆறுதலடையத் தொடங்குகையில், புண்யவானுன பாட்டியாலா மகாராஜா ஒரு வெடிகுண்டை வீசியிருக்கிறார். இந்த வெடிகுண்டு லண்டன் மகாநாட்டின் அஸ்திவாரத்தையே சீர்குலைத்து விட்டது. ஐக்கிய சர்க்காரை அடிப்படையாக வைத்துக்கொண்டு தான் லண்டன் மகாநாட்டு நடவடிக்கைகள் எல்லாம் நடைபெற்றிருக்கின்றன. காந்தி-இர்வின் ஒப்பந்தமும் நிறைவேறியிருக்கிறது. லண்டன் மகாநாட்டில் சர்வசம்மதமாக ஒப்புக்கொள்ளப்பட்ட ஐக்கிய சர்க்கார் அமைப்பை பாட்டியாலா மகாராஜா இப்பொழுது ஒப்புக்கொள்ள வில்லையாம். சுதேச சமஸ்தானங்களை யெல்லாம் ஒன்றாக இணைத்து ஒரு ஐக்கிய சமஸ்தானமாக்க அவர் ஒரு திட்டம் தயார்செய்து வருகிறாராம். அது இன்னும் பத்து தினங்களில் வெளிவருமாம். ஆகவே லண்டன் மகாநாட்டு நிலைமை தலைகிழாய் மாறிவிட்டது. இம்மாதிரியான ஒரு சிக்கல் விழுமென்று ஒருவரும் எதிர்பார்க்க வில்லை.

கன்சர்வெட்டிவ் கட்சியார் இந்தச் சிக்கலை வலுப்படுத்த தம்மாலான சூழ்ச்சிகள் எல்லாம் செய்வார்கள். ஆகவே நிலைமை மோசமானதாயும் ஆபத்துக்கிட மானதாயும் இருக்கிறது. ஐக்கிய சர்க்கார் அமைப்பை லண்டன் மகாநாட்டுக்கு விஜயம் செய்திருந்த மன்னர்கள் எல்லாம் ஒப்புக்கொண்டனர். அப்பால் சிம்லாவில் கூடிய மன்னர் சபையாலும் ஒப்புக்கொள்ளப் பட்டது. மகாநாட்டுக்குச் செல்லாத மன்னர்களும், அதை ஒப்புக்கொண்டு விட்டதாகப் பின்னர் பல சந்தர்ப்பங்களில் தெரிவித்திருக்கின்றனர். பாட்டியாலா மகாராஜாவின் இந்த மனமாற்றத்தை ஏனைய மன்னர்கள் ஆதரிக்கிறார்களா அல்லவா என்பது இன்னும் தெரியவரவில்லை. ஏனைய மன்னர்களின் அபிப்பிராய மறிந்தே ஏதேனும் முடிவுக்கு நாம் வரக்கூடும். பொதுவாக நிலைமை ஆபத்துக்கிடமாகவே இருக்கிறது. முடிவு எப்படியாகிறதோ தெரியவில்லை.

## எண்டிசைக் காட்சி.

### ஒரு ஜோசியம்.

நமக்கு ஜோசியத்தில் மெய்யாகவே நம்பிக்கையில்லையாயினும் இந்திய மண்ணில் ஜன்மம் எடுத்தபடியால் ஒரு ஜோசியம் கூற நம்மையறியாமலே ஒரு துணிச்சல் உண்டாகிறது. லண்டன் மகாநாட்டுக்கு பாட்டியாலா மகாராஜா ஒரு முட்டுக்கட்டை போட்டிருப்பதைப்பற்றி ஏற்கனவே நாம் கூறியுள்ளோம். கன்சர்வெட்டிவ் கட்சியாரும் இது போன்ற ஒருதடையைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். பெட்டிச்சாவி பிரிட்டிஷார் கையில் இருக்க இந்தியர்கள் சம்மதித்தால் இந்தியர்களுக்கு இரட்டை சுயராஜ்யமளிக்க பிரிட்டிஷார் தயார் தான். மத்திய சர்க்காரின் பொறுப்பாட்சியில்லாமல் இருந்தால்தான் பெட்டிச்சாவி பிரிட்டிஷார் கையில் இருக்க முடியும். பாட்டியாலா மகாராஜா வீசியிருக்கும் வெடிகுண்டு மூலம் மத்திய சர்க்காரில்தான் தகராறு ஏற்பட்டிருக்கிறது. இந்தியர்களோ சுயராஜ்யம் சுயராஜ்யம் என்று கத்திக்கொண்டும் இருக்கிறார்கள். ஏதாவது செய்யாவிட்டால் அவர்கள் கூச்சல் அடங்கவும் செய்யாது. மாகாணங்களுக்கு பூரண சுய ஆட்சியளிக்க எல்லா கட்சியாரும் சம்மதித்து விட்டார்கள். அவ்விஷயத்தில் அபிப்பிராய வித்திபாசமே கிடையாது. ஆகவே 1932ல் மாகாணங்களுக்கெல்லாம் சுய ஆட்சி அளிக்கப்படும். மத்திய சர்க்கார் விஷயம் சிக்கலாக இருப்பதினுல் அதை நிர்ணயம் செய்ய ஒரு கமிட்டி நியமிக்கப்படும். மாகாண சுய ஆட்சி அளிக்கப்படும் போது இந்தியர்கள் எல்லாம் தேர்தல் திருவிழாவிலும் மந்திரி வேட்டையிலும் கவனம்செலுத்தஆரம்பித்து விடுவார்கள். ஒவ்வொரு மாகாணத்துக்கும் 7 மந்திரிமார் இருப்பதினுல் மந்திரி வேட்டை பலமாகவும் நடைபெறும். பூரண சுயேச்சை காங்கிரஸ் கட்சியில் மகாத்மா காந்தி, பண்டித ஜவஹர்லால், சர்தார் படேல் ஆகிய மூன்றுபேரும் தான் மீதமாயிருப்பார்கள். அவர்கள் கட்சி மைனரட்டி கட்சியாகிவிடும். இதுதான் நாம் கூறும் ஜோசியம். அது பொய்யா மெய்யா என நிர்ணயம் செய்யும் பெறுப்பை கால தேவதைக்கு விட்டுவிடுகிறேம்.

### இனம் இனத்தோடே.

லண்டனுக்குச் செல்லும் இந்தியத் தலைவர்கள் அங்கே பெயர்பெற்ற பெரிய ஹோட்டல்களில் தங்குவது வழக்கம். லண்டனுக்கு செல்லும் வைதீக இந்துக்களின் ஜாகைக்காக திரு. பிர்லா என்ற கோடீசுரர் உதவியால் ஹாம்ப்ஸ்டெட் என்ற இடத்தில் ஆரியபவனம் என ஒரு மாளிகை கட்டப்பட்டிருக்கிறது. மகாத்மா லண்டன் சென்றல் அந்த ஆரியபவன மாளிகையில் தங்குவாரென்றே எல்லாரும் எதிர்பார்த்தார்கள். ஆனல் காந்தி மகாத்மாவல்லவா? சாமானியமனிதர்களைப்போல் நடந்தால் அவர் மகாத்மா பட்டத்துக்கு உரியவராவாரா? எனவே அவர் லண்டன் செல்லும்போது மூன்றுவது வகுப்பிலேயே கப்பல் பிரயாணம் செய்யப்போகிறாராம். லண்டனில் கிழக்குப் பகுதியில் ஏழை எளியோர் வசிக்குமிடத்தில் கிங்ஸீஸ்ஹால் என்ற சத்திரத்தில் தங்கப்போகிறாராம். எளியார்க்கெளியனை காந்தி ஏழைகள் கூட்டத்தில் வசிக்க விரும்புவது பொருத்தமானதே. இனம் இனத்தோடுதானே சேரும்.

### மைசூர் வைதீகர் கோபம்.

ஸர். கே. பட்டண்ண செட்டி மைசூர் சமஸ்தானத்தில் பாலிய விவாகத் தடைச் சட்டம் நிறைவேற்ற முயற்சி செய்வதைப்பற்றி நாம் ஏற்கனவே எழுதியிருக்கிறேம். எனவே அங்குள்ள வைதீகர்கள் இரண்டு தினங்களுக்கு முன் ஒரு கூட்டம் கூடி அந்த மசோதாவை எதிர்த்து ஒரு கண்டனத் தீர்மானம் நிறைவேற்றினார்கள். அக்கூட்டத்துக்கு "வீரகேசரி"யின் மாஜி ஆசிரியர் திரு. பி. சீதாராம சாஸ்திரி தலைமை வகித்தாராம். திரு. சீதாராம சாஸ்திரி வீரகேசரி ஆசிரியரா யிருந்தபோது தேசியவாதமே வாயாலெடுத்துக் கொண்டிருந்தார். மைசூர் சமஸ்தானத்தில் பொறுப்பாட்சி நிறுவ வேண்டுமென்றும் ஓயாமல் கூச்சல் போட்டிருந்தார். காங்கிரஸ் என்றல் உயிரையும் விடுவார். அப்பேர்ப்பட்ட தேசியப்புலிக்கும் பாலியவிவாகத் தடை மசோதா பிடிக்கவில்லை. தேசியவாதிகளென்று சொல்லிக்கொள்ளும் தென்னட்டு அய்யர்மாரெல்லாம் சமூகச் சீர்திருத்தமென்றல் பதறத்தானே செய்வார்கள்? ஆகவே சீதாராம சாஸ்திரியார் கோபித்துக் கொண்டதிலும் ஆச்சரியம் எதுவுமில்லை. இத்தகைய வைதீகப்பேங்கல்களுக்கு நல்லறிவு புகட்ட சுயமரியாதைக்காரர் பாடுபடுகையில் நம்மவர்களும் அவர்கள் கூடச்சேர்ந்து கொண்டு "சாமி போச்சு, சமயம் போச்சு, சாஸ்திரம் போச்சு" என்று கத்துவதுதான் நமக்கு ஆச்சரியமாக இருக்கிறது.

### தென்னடு மாதர்கள் கவனிப்பார்களா?

பம்பாய் மாதர்கள் பொதுக்கூட்டத்தில் ஸ்ரீமதி கமலாநேரு (பண்டித ஜவஹர்லால் மனைவி) பேசுகையில் பின்வருமாறு சொன்னாராம். "அந்நிய நாட்டு ஆடையாபரணங்களை அணிந்துகொண்டு நீங்கள் கோவிலுக்குப் போகிறீர்கள். அந்த உடைகளோடு ஒரு நாள் முழுதும் பூஜை செய்தாலும் கோவில் கதவுகள் திறக்கப்படமாட்டா! ஏழைகளுக்கு உதவுவதை விட உயர்ந்த பூஜை என்ன இருக்கிறது. திக்கற்றவர்களுக்கு உதவுவதும் பசித்தவர்களுக்கு அன்னமளிப்பதும் நமது பூஜையாக இருக்கவேண்டும்.

கல்லுக்குப் பாலும் தேனும் அபிஷேகம் செய்து கனகாபரணம் பூட்டி சிற்றுண்டி பேருண்டி படைத்து வரங்கேட்கும் தென்னட்டு மாதரசிகள் ஸ்ரீமதி கமலா நேருவின் வேண்டுகோளை காதில் போட்டுக்கொள்வார்களா!

### கரும்பு தின்னவும் கைக்கூலியா!

கரும்புதின்னவும் கைக்கூலி கேட்கும் குணம் நம்மவர்களை விட்டு எந்நாள் ஒழியுமோ தெரியவில்லை. பல இடங்களில் கட்டாய ஆரம்பக்கல்வி ஏற்பாடு அமுலில் இருந்தும் நம்மவர்கள் குழந்தைகளை பள்ளிக்கு அனுப்பாமல் அசட்டையாகவே இருந்து வருகிறார்கள். கும்பகோணம் நகரசபையைச் சேர்ந்த கோட்டையூர் வார்டில் குழந்தைகளைப் பள்ளிக்கனுப்பாத பெற்றோர்கள் மீது அதிகாரிகள் வழக்குத் தொடுத்தார்களாம். இனிமேல் பிள்ளைகளை சரியாக பள்ளிக்கனுப்புவதாக அவர்கள் முச்சலிக்கா எழுதிக் கொடுத்ததினுல் வழக்கு நிறுத்தப்பட்டதாம். ஏனைய பெற்றோர்களுக்கு இது ஒரு எச்சரிக்கையாக இருக்குமாக!

### நகரத்தார் தீர்மானம்.

சென்றபத்தாண்டுகட்குமுன்நகரத்தார் சமூகத்தினர் ஊர் ஊராகப் பல தீர்மானங்களைச் செய்து கட்டுப்படுத்த முயன்றனர். ஒன்றும் நிலைபெறவில்லை. அதற்கு அடிப்படையான காரணம் "எவன் எப்படி போனலென்ன? நம்முடையகௌரவத்தைப் பாதுகாத்தால்போதும்" என்ற மனப்பான்மை மலிந்திருந்ததே யாகும். இது மாறுதவரை இந்தத் தீர்மானங்கள் நிலைபெற முடியாது. காரைக்குடி நகரத்தாரும் சில தீர்மானங்களைச் செய்து ஆனிமீ 1௨ முதல் அமுலுக்குக் கொண்டுவர முயன்றிருக்கின்றனர். ஆனல் முதல் தேதிக்கு முன்பாகவே இனிமேல் நடைபெறும் பல மாதிரியாக விசேஷங்கட்காகப் பணம் முதலியன முன் அட்வான்ஸாகக் கொடுத்துத் தீர்த்துவிட்டனர். மங்குக்கடைகளை அனேகமாகக் காலி செய்து விட்டனர். தீர்மானத்தில் கண்ட விஷயங்கட்கு அப்பால் நிற்ப வைகளை அமுலுக்கு வருமுன் கொடுத்துவிட நினைப்பவர்கள் தீர்மானத்தை மனமார வரவேற்கவில்லை யென்பதில் சந்தேகமில்லை. கொடுத்தவர்களும் நகரத்தார் தான்; வாங்கிக் கொண்டவர்களும் நகரத்தார்கள் தான். ஆத்திரப்பட்டவர்கள் முன்னதாகவே கொடுத்து வாங்கிக் கொண்டனர். பணம் கையில் இல்லாது முடைப்படுபவர் சும்மா இருப்பார். பணக்காரருக்குப் பணக்கஷ்டம் ஒழிந்தபிறகு மெதுவாக மீறுவர்; அதனைக் கண்டிக்க முடியாது. அன்றே தீர்மானமும் உடைபடும். பின்னர் கொடுக்கமுடியாதிருந்தவருக்கு கணக்குப் பார்த்துக் கொடுக்கவேண்டிய அவசியம் ஏற்படும். இவைதான் முன் செய்து பார்த்துக் கண்ட அனுபவமாகும். இப்போது செய்யப்படும் தீர்மானம் நிலைத்து நிற்குமானல் நன்மைதரக் கூடும். மனமார அனுவசியமானதென்ற உணர்வின் மேல் இவை ஒழிக்கப்பட வேண்டும். பை கொடுப்பதும் பழங் கொடுப்பதும் பாத்திரம் கொடுப்பதும் கூட்டங்கூடி ஏற்படுத்திக் கொண்ட வழக்கமன்று. தானுகத் தோன்றின. இப்பொழுதும் தானுக ஒழிய வேண்டியதே நேரான முறையாகும். ஒவ்வொருவரும் இது அனுவசிய மென்றுணர்ந்து ஒழிக்க முன்னிற்க வேண்டும். ஒழிவு மறைவாகவும் தீர்மானத்திற்கு உள்நுழைந்தும் நடப்பது நேர்மையன்றென்பதைக் கவனித்தல் இன்றியமையாததாகும்.

### சாமி யார்!

கல்கத்தாவில் பி. ஜே. பார்க்கின்சன் என்னும் கிறிஸ்தவ சாமியார், மிஸ்டர் விக்கின் என்பவருடைய வீட்டுக்குச் சென்று தங்கி கடவுள் பிரார்த்தனைக் கூடம் நடத்தி வந்தாராம். மிஸ்டர் விக்கின் வெளியே சென்றிருக்கும் சமயங்களில் அவருடைய மனைவியுடன் நேசம் கொண்டு அப்பெண்ணும் சாமியாருமாக வெளியேறித் தனி வீடு பிடித்து வாழ்க்கை நடத்தவும் ஆரம்பித்து விட்டனராம். கண்டுபிடித்து வழக்குத் தொடரப்பட்டு பிரசிடென்ஸி மாஜிஸ்டிரேட் ஒன்பது மாதம் கடுங்காவல்தண்டனை விதித்தாராம். தீர்ப்பில் மாஜிஸ்டிரேட் கூறியிருப்பது வருமாறு:—

"துரதிர்ஷ்டமான அப் பெண்ணின் மனத்தைத் தன் வயப்படுத்த எதிரி தனது மனோ வல்லமையை முழுதும் காட்டியிருக்கிறார். அதுவும் மதத்தின் போரால் இருவருக்கும் ஆரம்பமான நட்பு காதலில் வந்து முற்றிவிட்டது. எதிரி அநியாயமாக ஒரு குடும்பத்தை நாசப்படுத்தி விட்டான். மத சம்பந்தமாக ஏற்படும் ஆனந்த பரவசம் சில வேளைகளில் ஒழுக்கத்திற்கும் சட்டத்திற்கும் ஒவ்வாத காரியங்களில் புகுந்து வருகிறதென்பது யாவருமறிந்த விஷயமாகும்."

### கலியாணம் செய்துகொண்டாலென்ன?

திருச்செந்தூரை யடுத்த வேதகக்கோட்டை என்னும் கிராமத்தில் 26 வயதுள்ள ஒரு விதவைப்பெண் ஒரு குழந்தையைப் பெற்று சமையலறையில் புதைத்துவிட்டதாக வழக்குத் தொடரப்பட்டு இளம் விதவையதலாலும் இதனல் ஏற்கனவே அதிகமான கஷ்டத்துக்குள்ளாகியிருக்கிறபடியாலும் ஆறுமாதத்திற்கு நன்னடக்கை ஜாமீன்வாங்கிக்கொண்டுவிட்டப்பட்டிருக்கிறதென்று தெரிகிறது. பெற்ற குழந்தையை வைத்துக் கொள்ளக்கூடாதென்ற சமூகக் கட்டுப்பாடிற்கஞ்சியே இம்மாதிரியான நிகழ்ச்சிகள் தோன்றுகின்றன வென்பதில் ஐயமில்லை. ஆண் துணையை விரும்பும் பெண்கட்கு மறுகல்யாணம் செய்யும் உரிமை யளிக்கப்படுமானல் இம்மாதிரி நிலைமை ஏற்படமுடியாதன்றே? விதவையாக இருக்க வேண்டுமென்ற கட்டுப்பாட்டால் பலருக்கு நன்மை—அல்லது கௌரவம் கிடைக்கிற தென்பதை இம்மாதிரி சந்தர்ப்பத்தில் யோசித்துப் பார்க்க வேண்டும்.



## உள்ளூர்ச் செய்தி.

| | |
|---|---|
| சென்னை உண்டியல் வட்டம் | 0-3-0 |
| ரெங்கூன் உண்டியல் வட்டம் | 0-12-0 |
| பவுன் விலை | 13-10-0 |
| வெள்ளிக்கட்டி | 43-8-0 |

**காப்பிக்கடைகளில்குறைந்தவிலை:-** இவ்வூர் பொது ஜனங்கள் தற்போதிய பொருளாதார நிலைமை முன்னிட்டுச் செய்த கிளர்ச்சியின் பயனுக பெரும்பான்மையான காப்பிக்கடைகள் பலகாரங்களின் விலையைக் குறைத்து விட்டன. ஒரு சேர் காபி 1 அணுவுக்கும் இட்லி ஒன்று காலணுவுக்கும் இங்ஙனமே பிற சிற்றுண்டிகளும் கிடைக்கின்றன. அதிசீக்கிரத்தில் எல்லா கடைகளும் இம்முறையை பின்பற்றுமென்று தெரிகிறது.

**மாணவர் பாராட்டு:—** இவ்வூர் நல உரிமைத் தொண்டர் சங்கத் தலைவர் திரு. சோமசுந்தரம் செட்டியாரவர்கள் தமக்கு மகவு பிறந்ததை முன்னிட்டு ஸ்ரீ கொப்புடைய நாயகி வித்தியாசாலை மாணவ மாணவிகட்கு மிட்டாய் பழங்கள் வழங்கினர். குழந்தைகள் அவரைப் பாராட்டினர்.

**ஒரு சங்கீதக் கச்சேரி:—** ஆனி மீ கக-௨ (25-6-31) நாக. நாப. வீட்டில் நடக்கும் காப்புக்கட்டுப் புதுமையை முன்னிட்டு அன்று மாலை ௬ மணிக்கு முசிரி சுப்பிரமணிய அய்யரவர்கள் பாட்டு, கும்பகோணம் ராஜமாணிக்கம் பிள்ளை அவர்கள் பிடில், மதராஸ் வேணுநாயக்கர் அவர்கள் மிருதங்கம், கும்பகோணம் எ. கே. ரெங்கய்யர் அவர்கள் டோலக் ஆகியவற்றுடன் ஓர் சங்கீதக் கச்சேரி நடைபெறும்.

## தந்திச் செய்தி.

| | பினங்கு 17—6—31 |
|---|---|
| உண்டியல் விலை | 155 |
| ஈயம் விலை | 52 |
| ரப்பர் விலை | 12 |

## கப்பற் செய்தி.

கப்பல்கள் நாகப்பட்டணத்திலிருந்து சிங்கப்பூர் முதலான விடங்கட்கு பிரயாணமாகும் விவரம்

| கப்பல் | புறப்படுந்தேதி |
|---|---|
| ராஜுலா | 28—6—31 |
| ரோணு | 12—7—31 |
| ராஜுலா | 26—7—31 |

கப்பல்கள் மலாய் நாட்டிலிருந்து நாகப்பட்டணம் வந்துசேரும் விவரம் வருமாறு:—

| கப்பல் | வருந்தேதி |
|---|---|
| ராஜுலா | 18—6—31 |
| ரோணு | 2—7—31 |
| ராஜுலா | 16—7—31 |
| ரோணு | 30—7—31 |

### தேவகோட்டை.

**கொலை பாதகன் பிடிபட்டான்:—** இவ்வூரில் சென்ற சில தினங்கட்கு முன் மோர் விற்கச் சென்ற நகரத்தார் சிறுமியை நகைகளை பறித்துக் கொண்டு கொலை செய்து புதைத்து விட்டு ஒடின கொலையாளி மனைவியுடன் பிடிபட்டு 15—6—31 ல் தேவகோட்டைக்கு கொண்டுவரப்பட்டான். அவனைப்பார்க்க ஏராளமான ஜனங்கள் கூடினர். அவன் கொலை செய்துவிட்டு மதுரை ஜில்லா பெரியகுளம் தாலூக்கா தனக்குடி என்ற கிராமத்தில் மலைச்சரிவில் ஒளிந்து கொண்டிருந்ததாகவும் அதை இவ்வூர் ஆக்டிங் சப்இன்ஸ்பெக்டர் திரு. முத்துச்சாமி நாயுடு என்பவர் அறிந்து அவனை பிடித்து வந்ததாகவும் சொல்லப்படுகிறது. விசாரணை திருவாடானையில் நடைபெறும்.

காரைக்குடி

## தொழிலாளர் கிளர்ச்சி.

இரண்டு வாரங்கட்கு முன்பு நடந்த காரைக்குடி நகரத்தார் கூட்டத்தில் தற்போதிய பொருளாதார நிலைமை முன்னிட்டு கொத்தர், தச்சர், கல்வேலைக்காரர், பொன் வேலைக்காரராதி யோரின் சம்பளங்களை நூற்றுக்கு 25 விகிதம் குறைத்துவிட வேண்டுமென்று ஓர் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. தீர்மானத்தை மேற்படித் தொழிலாளரனைவரும் கண்டித்துக் கிளர்ச்சி செய்கின்றார்கள். கிளர்ச்சி கடந்த 15 நாட்களாக நடைபெற்று வருகிறது. புதுக்கோட்டை ஆசாரியார் சத்திரத்திலும் மகர்நோன்புப் பொட்டலிலும் பிறவிடங்களிலும் பல கூட்டங்கள் கூட்டப்பட்டு விட்டன. நகரத்தார்கள் கிளர்ச்சியைக்கண்டு நூற்றுக்கு 25 குறைப்பதென்றிருந்த தீர்மானத்தை மாற்றி 12½ குறைப்பதென்று மாற்றியிருப்பதாகத் தெரிகிறது. இது உண்மையானல் தொழிலாளர்கிளர்ச்சி ஒருவாறு பயன் பெற்று விட்டதென்னலாம். தொழிலாளர்கள் மேற்படிக் குறைவு தீர்மானத்திற்காக திருப்தியடையவில்லை. முன்னிருந்தபடி நூற்றுக்கு நூறும் தந்தாலல்லாமல் வேலை செய்வதில்லையென்று தீர்மானித்திருக்கிறார்கள். இத்தீர்மானத்தை வலியுறுத்தி தகுந்தபடிநடத்துவதற்காகஇம்மாதம் 15ந் தேதி மாலை 5-30 மணிக்கு மகர்நோன்புப் பொட்டலில் ஓர் தொழிலாளர் கூட்டம் கூடப்பெற்றது. அதில் திரு வேடப்பன் சேர்வையவர்கள், தலைமை வகித்தார்கள். திருவாளர்கள் கணபதி, ப. சிவானந்தன், இ. சிவம், சி. பெரி. சி. மெய்யப்பா, கெ. வி. அழகர்சாமி, அ. பொன்னம்பலம் ஆகியோர் தொழிலின் பெருமையைப் பற்றியும், தொழிலாளிகள் கௌரவிக்கப்பட வேண்டியதி னவசியத்தைப் பற்றியும், காரைக்குடி போன்ற விடங்களில் சம்பளம் குறைவுபடுவதால் தொழிலாளிகளுக்கு ஏற்படக்கூடிய கஷ்டங்களைப்பற்றியும் பேசிவிட்டு அன்று தொழிலாளர் சங்கம் திறந்தமைப்பற்றிய மகிழ்ச்சியைத் தெரிவித்தனர். அப்பால் தொழிலாளர் சங்கத்திற்கான தலைவர், காரியதரிசிகள், பொக்கிஷதாரர் முதலியோர் தேர்ந்தெடுக்கப்பட்டனர். திரு கெ. வி. அழகர்சாமி, டாக்டர் கோவிந்தராஜலு ஆகியவர்கள் முறையே தலைவர் உபதலைவர்களாகவும் திரு ப, சிவானந்தன, திரு அ. பொன்னம்பலம் ஆகியவர்கள் உதவிகாரியதரிசி, காரியதரிசிகளாகவும் திரு. கணபதி பொக்கிஷதாரராகவும் நியமிக்கப்பட்டனர். இரவு 9-30 க்கு கூட்டம் கலைந்தது. தொழிலாளர் இயக்கம் பலப்பட்டு வருகின்றது. அவர்கள் அமைதியாகவும் நியாயமாகவும் தங்கள் முழுச் சம்பளத்துக்காக போராடத் தீர்மானித்திருக்கின்றார்கள்.

## பென்சில் பாக்டரியில் தீ.

நிகழும் ஜூன் 9-ந் தேதி இரவு சென்னை பென்ஸில் பாக்டரியில் பெருந் தீ உண்டாய் விட்டது. அதன் பலனுக 10 ஆயிரம் ரூபாய் நஷ்டமேற்பட்டது. உயிர்சேதம் ஏற்படவில்லை. சீக்கிரத்தில் எஞ்சின்கள் வந்து நெருப்பை அவித்தன. எரிந்துபோன பென்சில்கள் சென்னை பம்பாயாகிய கவர்மெண்டுகளுக்கு அனுப்பப் பார்சல்கட்டி வைக்கப்பட்டவைகளாம். யாவும் இன்ஷூர் செய்யப்பட்டிருந்தன. தீக்குக் காரணம் தெரியவில்லை.

## எழுவங் கோட்டையில் 144.

எழுவங்கோட்டையில் ஓர் ஆதிதிராவிட மகாநாடு 14-6-30ல் கூட்டுவதாக ஏற்பாடு செய்யப்பட்டு, தண்டுப்பிரசுரங்கள் 3வாரங்களுக்கு முன்பு வழங்கப்பட்டன. மகாநாட்டின் நோக்கம் ஆதித்ராவிடர்களுக்கு பள்ளிக்கூடங்கள் எற்படுத்தவதும், ஐக்ய நாணய சங்கங்கள் ஏற்படுத்துவதுமாகும். இந்நிலையில் எழுவங்கோட்டை நாட்டார்கள் (கள்ளர்) இம்மகாநாட்டை நடக்கவிடாது தடுத்துவிடுவதென தீர்மானித்துக் கொண்டனர். காரணம் ஆதிதிராவிடர் ஒற்றுமையைக்குலைத்து விடுவதேயாகும். நாட்டார் ஒன்றுகூடி இதை எவ்வாறயினும் தடுத்துவிட வேண்டு மென தேவகோட்டை போலிசில் தகவல் கொடுத்ததால் உடனே தேவகோட்டை சர்க்கில் இன்ஸ்பெக்டர் கோபால கிருஷ்ணய்யர், திரு. ஜான். (President Adi Dravida Association) அவர்களிடம்எழுவங்கோட்டையில் கூட்டப்போகும் மகாநாட்டை நிறுத்திவிடுவது நலமெனவும் அப்படி நடத்தினுல் சச்சரவு எற்படுமென்றும் கேட்டுக்கொண்டார். திரு.ஜான்அவர்கள் இதற்கிணங்காது உடனே டிப்டி சூப்பரின்டெண்டு அவர்களிடம் விஷயத்தைக் கூறித் தனக்குப் போதிய பந்தோபஸ்து கொடுக்க வேண்டுமெனக் கேட்டுக் கொண்டார். அதற்கவரிணங்கினுர். தேவகோட்டை போலீஸ் இன்ஸ்பெக்டர் தேவகோட்டை போலீசாரால் போதிய பாதுகாப்பளிக்க முடியாதெனக் கருதியதாகக் காரணம் கூறி திருவாடானை சப் மாஜிஸ்திரேட்டிடம் ஒரு 144ஐ 14-6-31ல் வாங்கி எழுவங்கோட்டை ஆதிதிராவிடர்கள் எவ்வித கூட்டமும் கூட்டக் கூடாதென ஏற்பாடு செய்து விட்டனர். 144—14-6-31ல் வாங்கப்பட்டு மகாநாடு நடப்பதற்குச் சில மணி நேரங்களுக்கு முன்பு சார்பு செய்யப்பட்டது.

## வாணியம்பாடி தொழிலாளர் எச்சரிக்கை.

நாளது 1931ஞு ஜூன்மீ 7௨ ஞாயிற்றுக்கிழமை மாலை 5 மணிக்கு நீலிக்கொல்லை முஹல்லா பாடசாலையில் ஜனுப் மெத்தேக்கார அப்துல் அஜீஸ் சாயபு அவர்கள் அக்கிராசனத்தின் கீழ் மஹா கூட்டம் கூடி யோசித்து, நாளுக்கு நாள் வியாபாரம் க்ஷீணதசை அடைந்து கஷ்டகாலமா யிருப்பதாலும், தானியம் வகையரு விலைகள் சகாயமா யிருப்பதாலும் தச்சர், கொல்லத்துகாரர், வர்ணக்காரர், கூலி ஆட்கள் முதலியவர்களுக்கு கூலிகள் கம்மிபடாமலும், மணல், மண், செங்கல் வண்டி சத்தங்கள் கம்மிபடாமலும் இருப்பதால் கூலிகள், சத்தங்கள் ஆகியவற்றை குறைத்து கொடுக்க வேண்டு மென்றும் அவ்வேற்பாடு 1931ஞு ஜூன்மீ 14௨ முதல் அமலுக்கு வரவேண்டு மென்றும் தீர்மானிக்கப்பட்டது.

இதனைக் கண்டு அங்குள்ள தொழிலாளர்கள் ஏகோபித்து கிளர்ச்சி செய்துவருகிறார்கள். துண்டுப் பிரசுரங்கள் மூலம் முதலாளிகளிடம் கூலியைக் கூட்டவேண்டுமென்றும் இன்றேல் "தொழிலாளிகள் கூலி நிர்ணய அறிக்கை தங்கள் தலைக்கப் போவதறுதி" என்றும் கூறுகின்றார்கள் என்று ஒரு நிருபர் எழுதுகிறார்.

## மதுரையில் "வெடிகுண்டு."

மதுரையிலிருந்து வெடிகுண்டு என்னும் ஓர் தேசிய தமிழ் வாரப்பத்திரிகை நாளது பிரஜோத்பத்திஞு ஆனிமீ 7௨ (21—6—31) முதல் பிரதி ஞாயிற்றுக்கிழமைகள் தோறும் வெளிவரும். என்று A. S. ஆனந்தம் அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## குற்றாலத்தில் சாரல் ஆரம்பம்.

குற்றாலத்தில் சாரல்காலம் ஆரம்பமாகி விட்டது. பருவ நிலைமிக சௌக்கியத்தைக் கொடுக்கக் கூடியதாகவிருக்கிறது. பல இடங்களிலிருந்தும் சாரலை அனுபவிக்கும் பொருட்டு ஜனங்கள் வந்துக் கொண்டேயிருக்கிறார்கள்.

# செட்டிமார்நாடு.

## தேவகோட்டை.

இங்கர் தென்னிந்திய கலஉரிமைச் சங்கத்தின் (S. I. L. F.) கூட்டம் ஒன்று 15—6—31ந் தேதி மாலை 3-மணிக்கு நடந்தது. அக்கூட்டத்தில் இங்கர் யூனியன் போர்டில் திருவாளர் நா. க. அ. ராம. கிருஷ்ணன் செட்டியார் அவர்கள் வகித்து வந்த நாமினேஷன் ஸ்தானம் காலியாகிவிட்டபடியாலும், இங்கர் யூனியன் போர்டில் ஆதித்திராவிடர் பிரதிநிதித்துவமாவது அல்லது பெண்கள் பிரதிநிதித்துவமாவது இல்லா திருப்பதாலும்மேற்படி ஸ்தானத்தில் ஆதித்திராவிடரின் பிரதிநிதியாக இரவுசேரிதிரு.குப்பான் மகன் வைரவனையாவது அல்லது இரவுசேரி திரு. சோலை மகன் அஞ்சனையாவது நியமிக்கவேண்டுமென்றும்,அல்லதுபெண்கள் பிரதிநிதியாக வக்கில் S. சிவசுப்பிரமணியம் அவர்கள் மனைவி கமலா அவர்களை நியமிக்கவேண்டுமென கனம் ஸ்தல சுயாட்சி மந்திரியவர்களைக் கேட்டுக்கொள்வதாக ஒரு தீர்மானம் செய்யப்பட்டது.

**நகரத்தார் ஹைஸ்கூல்;—** இவ்வூர் ஹைஸ்கூல் ஜூன்மீ 8உ முதல் கோடைகால விடுமுறைக்குப் பிறகு திறக்கப்பட்டு நடந்து வருகிறது. இவ்வருஷம் எஸ். எஸ். எல். சி. பரிக்ஷையில் பிரசன்னமான 22 மாணவர்களில் இருவரே தேறியிருக்கின்றனர்.

**ஜட்ஜ்கள் நியமனம்:-** திரு. கிருஷ்ணமூர்த்திவாஜ் பேயரும், திரு. வெங்கட்டராமையா பந்துலுகாரும் முறையே திருச்சிக்கும், நெல்லூருக்கும் மாற்றப்பட்டு விட்டபடியாலும் அவர்களுக்கு பதிலாக முறையே திருவாளர்கள் வெங்கட்ராமய்யர், ரெங்கசாமி அய்யங்கார் இவர்கள் வந்து ஜூன்மீ 22உ முதல் வேலை பார்ப்பார்கள் எனத் தெரிகிறது.

**நகரத்தார் கூட்டம்:—** தற்பொழுதிருக்கும்பணமுடையாலும் வியாபார மந்தத்தாலும் இவ்வூர் நகரத்தார்கள் சிவன்கோவிலில்வைகாசிமீ 31உ கூட்டம் கூடி கீழ்க்கண்டபடி கூலிகளை குறைத்திருக்கிறார்கள்.

(1) இரும்பு வகையறா வேலைகளுக்கு ரூபாய் ஒன்றுக்கு கால்ரூபாய் வீதம் குறைவு.

(2) தச்சு. கொத்து கல்வேலை, வர்ண வேலை வகையறாவுக்கு மேஸ்திரிக்கு நாள் ஒன்றுக்கு ரூ ஒன்றும் மற்ற வேலைக்காரர்களுக்கு இனம் ஒன்றுக்கு ரூ முக்கால் வீதமும் கொடுக்கிறது.

(3) மெய்க்காட்டான ஆள் ஒன்றுக்கு பெரிய ஆளுக்கு நாள் ஒன்றுக்கு அணா எழும் சிற்றாளுக்கு நாள் ஒன்றுக்கு மூன்றரை அணா வீதமும கொடுக்கிறது.

(4) விசேஷங்களில் சமையல், கொட்டகை, பரிசாரகர்கள் முதலிய வேலைக்காரர்களுக்கு கண்டராக்டாஞலும் நாள் சம்பள மாஞலும் ரூ 1-க்கு கால் ரூபாய் வீதம் குறைக்கிறது.

(5) வெள்ளி, தங்க, ரெத்தின வேலைக்கும் ரூபாய்க்கு கால் ரூபாய் குறைக்கிறது.

மேற்கண்ட தீர்மானங்கள் ஆனிமீ 3-உ முதல் அமுலுக்கு வரும்.

இன்னும் காரியஸ்தர்கள் சம்பள விஷயமும் மற்றும் ஆனி 4-ந் தேதி கூடும் கூட்டத்தில் பைசலுக்கு வருமெனத் தெரிகிறது.

**சரஸ்வதி வாசகசாலை:—** இவ்வாசகசாலையின் அங்கத்தினர்களின் முயற்சியால் மேற்படி வாசகசாலைக்காக திரு. செமு. வெ. அழ. அவர்களின் தோட்டத்தில்கண்டதேவி ரோட்டில் சுமார் 300 ரூ. வரை செலவுசெய்து நல்ல காற்றோட்டமுள்ள ஒரு கட்டிடம் கட்டி முடிக்கப்பட்டிருக்கின்றது.

## ஆ. முத்துப்பட்டணம்.

**ஸ்ரீலோகநாயகி விலாஸ் பந்தடி மறைால்:—** இப் பந்தடிமாலின் சார்பில் 18—6—31ந் தேதி காலையில் ஒரு பரிசளிப்பு விழா நடைபெறும். அவ்விழாவிற்கு தேவகோட்டை சப் கலக்டர் திரு. ஆர். எம். சுந்தரம் எம். ஐ. சி. எஸ். அவர்கள் தலைமை வகிப்பார்கள்.

## கண்டனூர்.

(நமது நிருபர்)

**சபிண்டியில் திருத்தம்:—** ஸ்ரீமான் ராம. வி. அ. சுப்பிரமணியன் செட்டியாரவர்கள் மனைவியார் ஸ்ரீமதி அலர்மேலு ஆச்சி அவர்கள் காலஞ் சென்றதை முன்னிட்டு நடைபெற்ற சபிண்டியில் ஆறு இலைகள் மட்டும் பிராமணர்களுக்குக் கொடுக்கப்பட்டன. வேறு ஒரு சடங்கும் செய்யப்படவில்லை. சுமார் 1500 ஏழைகளுக்கு ஒருபடி அரிசியும் இரண்டணாவும் கொடுக்கப்பட்டது. ஒரே வகுப்பாருக்குக் கொடுக்கும் வழக்கத்தை நிறுத்தி ஏழைமக்களுக்குக் கொடுத்த திரு. செட்டியாரவர்களின் செயலை எல்லோரும் பெரிதும் பாராட்டுகின்றனர்.

**பஞ்சாயத்து போர்டு:—** இதன் கூட்டமொன்று ஜூன்மீ 3-உ நடைபெற்றது. புதிய மெம்பர்களான திரு. மு. செ. மு. செல்லியான் செட்டியாரவர்களும், திரு. பிரான்மலை ராவுத்தர் அவர்களும் ராஜவிஸ்வாசப் பிரமாணம் செய்தனர்.

**கும்பாபிஷேகம்:—** சிவன் கோவில் அமமன் சந்நிதான ராஜகோபுரக் கும்பாபிஷேகமும் துவாரபாலகர் பிரதிட்டை முதலியனவும் வைகாசிமீ 25உ சிறப்பாக நடைபெற்றது.

**புதிய ஸ்டோர்:—** ஆனிமீ 1உ காலை லெட்சுமிஸ்டோர்ஸ் திறக்கப்பட்டது. கதர் இந்திய கல்துணி முதலியன விற்கப்படும்.

**உற்சவம்:—** சிவன் கோவில் உற்சவம் ஆனிமீ 2உ முதல் ஆரம்பமாகி நடைபெற்று வருகிறது. உற்சவத்தை முன்னிட்டு ரிசர்வ் போலீசார் வந்திருக்கின்றனர்.

## விஸ்வநாதபுரம்.

**மகாண 1931ம் வருஷ பாட்மிண்டன் டபிள்ஸ்போட்டி விளையாட்டு:—** ஒரு மாகாண பாட்மிண்டன் டபிள்ஸ் போட்டி விளையாட்டு விஸ்வநாதபுரம் ஸ்ரீ சாரதா ரிக்ரியேஷன் கிளப்பில் ஜூலை முதல் தேதியில் நடைபெறும். எல்லோரும் அதில் பங்குகொள்ளலாம். ஜூன் 25ந் தேதிக்குள் டீம்கள் அனுப்பப்பெறவேண்டுமென்று கமிட்டியார் விரும்புகின்றனர். இக்கமிட்டியின்காப்டன் திரு. P. C. T. P. பிச்சப்பா செட்டியார், காரியதரிசி திரு. P. K. N. குமரப்பசெட்டியார்.

தலைவர் எஸ். சாம்பமூர்த்தி சாஸ்திரிகள். கமிட்டி மெம்பர்கள் திருவாளர்கள் ராஜகோபால ஐயங்கார், பஞ்சாபகேச ஐயர், C. T. M. முத்துராமன் செட்டியார், K. M. பிச்சப்ப செட்டியார், P. L. பழனியப்ப செட்டியார். மாகாண வின்னர்கட்கு தங்க மெடல்களும், ரன்னர்களுக்கு நடுவில் தங்கமுள்ள வெள்ளி மெடல்களும் அளிக்கப்படும். செட்டி நாடு வின்னர்கட்கு தனிப்பட்ட தங்க மெடல்களும், ரன்னர்கட்கு வெள்ளி மெடல்களும் அளிக்கப்படும். ஜூன் 25-ந் தேதிக்கு முன்சேர வேண்டிய தாகிய ஒவ்வொரு டீமுக்கும் பிரவேசக் கட்டணம் ரூபாய் 2. அதோடு விளையாடுவோர்களுடைய பேரும் கொடுக்கப்படவேண்டும். கடிதப் போக்கு வரத்துக்கள் காரியதரிசி, ஸ்ரீசாரதா ரிக்ரியேஷன் கிளப், விஸ்வநாதபுரம், ராயசந்திரபுரம் போஸ்டு, திருச்சி ஜில்லா என்ற விலாசத்துக்கு எழுத வேண்டும்.

**கதாகாலக்ஷேபம்:—** இவ்வூர் நா. க. அ. நா. பழ. கண்ணப்பசெட்டியார் வீட்டில் நடைபெறும் புதுமையை முன்னிட்டு 19—6—31 வெள்ளிக்கிழமை மாலை 4 மணிக்கு சென்னை மிஸ். சரஸ்வதிபாயால் கதாகாலக்ஷேபம் நடத்தப்பெறும்.

## காந்திஜிக்கு வெள்ளி சிம்மாசனம்.

பம்பாய், ஜூன், 15—

ஸ்ரீமதி கங்காபாய் மங்கன்லால் கோபால் தாஸ் நேற்று மணி பவனத்தில் மகாத்மாகாந்திக்கு வெள்ளி நாற்காலி யொன்றையும், வெள்ளி சிம்மாசனம் ஒன்றையும் பாதகாணிக்கையாகச் செலுத்தினர்.

அந்த நாற்காலியின் விலையை 2 ஆயிரத்திற்குமேல் மதிப்பிடுகின்றனர். அது சித்திர வேலைப்பாடுகள் அமைந்ததாக விருக்கிறது. அதில் பட்டுத் திண்டுகளைச் சேர்த்துள்ளனர். அந்த நாற்காலியைப் பார்த்ததும், மகாத்மா "எலத்திற்குக் கொண்டுவந்திருக்கின்றீர்களா?" என்று கேட்டாராம்.

## திருப்பாலக்குடியில் சாமி.

### இந்து மதத்தின் போக்கு.

ராமநாதபுரத்தை யடுத்த திருப்பாலக்குடி என்னு மிடத்தில் ஒரு மகமதிய சந்நியாசி ("பெரியவர்") இருந்து வருகின்றார். இவர் பூமிக்குள் பல வருஷங்களாக மறைந்திருந்தார் என்றும் அப்பால் சமீபத்தில் "உலகை உய்விக்கும் பொருட்டு" வெளியே வந்திருக்கின்றாரென்றும் கூறப்படுகின்றது. இவரைப்பற்றி ஜனங்கள் கூறிச்சொல்லும் கதைகளை முழுதும் எழுதுவதென்றால் பல புராணங்கள் வேண்டும். அவற்றைப் பார்க்கும் போது இந்து மதமும் இந்துக்களும் எவ்வளவு அறியாமையில் மூழ்கியிருக்கின்றார்கள் என்றே சொல்லவேண்டும்.

கடந்த ஒருமாத காலமாக செட்டிமார் நாட்டிலுள்ள பல ஜனங்கள் தலைக்கு 10 15 ரூபாய் செலவிட்டு அங்கு சென்று இந்தச் சாமியாரிடம் தீர்த்தம், எலுமிச்சம்பழம் ஆகியவற்றைப் பெற்றுவருகின்றார்கள். இவ்விரண்டையும் உபயோகப்படுத்தினால் எந்தவிதமான நோயும் தீர்ந்துவிடுமென்பது அநேக பாமர மக்களின் நம்பிக்கை. இவ்வாறு தீர்த்தம் பெற்று வந்த பல நோயாளிகளை பார்த்தேன்; பார்க்கிறேன். ஒருவருக்காவது நோய் வாசியாகவில்லை. என்றாலும் பகுத்தறிவற்ற பாழான இந்துமதத்தால் இருள் பாய்ந்த ஞானக்கண் அற்றிருக்கின்ற மக்கள் தொகை தொகையாகப் போவதை நிறுத்தவில்லை. என்னே! மக்களின் அறியாமை. இந்த நாகரிக காலத்திலும் ஒரு மனிதன் பூமியில் நுழைந்து மேலே வந்து மக்களுக்கு தண்ணீரைக் கொடுத்து நோயைத் தீர்க்கின்றாரென்று நம்புகின்ற ஜனங்களிருக்கின்றார்களென்பது விந்தையன்றோ? ஆ! இந்து மதமே! இது உன் யோக்கியதையா என்று "ஓர் தனவைசிய இளைஞன்" எழுதுகிறார்.

(9-ம் பக்கத் தொடர்ச்சி.)

மாலையில் 4-20க்கு விசாரணைக்காக வைக்கப்பட்டவர்களை மட்டும் அடைக்கும் சப் ஜெயிலுக்கு எப்போதுமுள்ள போலீஸ் காவலில் வழக்கப்படி 14 பேரைக் கொண்டு வந்தனர். சப்ஜெயில் வந்தடைந்ததும் காவலாகவந்த போலீஸ்காரர்கள் கைதிகளை உள்ளே தள்ளுவதற்கு முன்னரே கைக்கட்டுகளையும் சங்கிலிகளையும் கழற்றிவிட்டனர். எல்லாக் கைதிகளும் விடுதலையடைந்தவுடன் அங்குகிருந்த 25 துப்பாக்கிகளையும் வெடி மருந்தையும் கைப்பற்றிக் கொண்டனர். இரண்டொரு தரம் துப்பாக்கிப் பிரயோகம் செய்துகொண்டு பிறகு ஆயுதங்களோடு ஒருமிக்க எல்லோரும் வெளியே வந்தனர். நகரில் பெரும் பீதியுண்டாயிற்று. பிறகு அவர்கள் பக்கத்திலுள்ள மலைக்குன்றை நோக்கிச் சென்றுவிட்டனர். எந்த வழியாக அவர்கள் போனார்களென்பது தெரியவில்லை.

அவர்கள் போனதும் மெடிகல் (வைத்திய) உத்தியோகஸ்தரும், மற்றவர்களும் சப் ஜெயிலை வந்து பார்த்ததில் 65 கைதிகளில் 40 பேரைக் காணவில்லை. இன்று அமைதி நிலவுகிறது.





# நமது தபால்பெட்டி.

## ஐக்கிய மலாய் நாட்டு நாட்டுக்கோட்டைச் செட்டியார்களின் வர்த்தக சங்கம்

### கோலாலம்பூர் திருவாளர் நா. சுப. ராம. மெய்யப்ப செட்டியார் அவர்களால் திறந்துவைக்கப்பட்டது.

மேற்படி சங்கத்திறப்பு விழாவுக்கென சிலாங்கூர் பல பாகங்களிலுமுள்ள நகரத்தார்கள் அனைவரும் (சுமார் 100 பேர்கள்வரை) கிள்ளான் செட்டியார்கள் கோவிலில் விஜயம் செய்திருந்தனர்.

குறிப்பிட்ட 9-30 மணிக்கு சங்கத் தலைவர் திரு. மு. ராம. இராமன் செட்டியார் அவர்கள் சங்கத்தைத் திறந்து கொடுக்கும்படி கேட்டுக்கொண்டதற்கிணங்க திரு. நா. சுப. ராம. மெய்யப்ப செட்டியாரவர்கள் சங்கத்தைத் திறப்பதற்குமுன் நிகழ்த்திய சொற்பொழிவு:—

அறிவிற் சிறந்த பெரியோர்களே! ஐக்கிய மலாய் நாட்டின் நாட்டுக்கோட்டைச் செட்டியார்களின் வர்த்தக சங்கத்தின் சிலாங்கூர் சமஸ்தானத்தின் கிளைச் சங்கத்தை இங்கு இன்று என்னைத் திறந்து வைக்கும்படி சிலாங்கூர் நகரத்தார்கள் கேட்டுக்கொண்டார்கள். அறிவிற் சிறந்த பெரியோர்கள் பலர் இருக்க அறிவிலும் ஆற்றலிலும் சிறியோனாகிய என்னைத் திறந்துவைக்கும்படி கேட்டுக்கொண்டது என்மேலிட்ட அன்பின் காரணமென்றே நினைக்கின்றேன். எனவே அன்னவர்கள் கேட்டுக்கொண்டதற்கிணங்க இச்சங்கத்தைத் திறந்து வைப்பதற்கு நான் மிகவும் மகிழ்ச்சி யடைகின்றேன். ஒவ்வொருசமூகத்தினரும்இவைபோன்ற பல சங்கங்கள் திறந்து அச்சங்கங்கள் வாயிலாகப் பல நன்மைகளை அடைந்து வருகின்றார்கள் என்பது எல்லோரும் நன்கு அறிந்ததே. எனவே நாம் எல்லோரும் ஒற்றுமையோடு இருந்து நாம் இங்கு இப்பொழுது திறக்கவிருக்கும் இச்சங்கத்திற்குப் பல நன்மைகள் செய்து பல்லாண்டு வாழைக்கும்படி வேண்டிக்கொண்டு இச்சங்கத்தைத் திறந்துவைக்கின்றேன்." என்று பேசி அனைவரின் கரகோஷத்தினிடையே திறந்து வைத்தார். பின்னர் கரு. மு. சுப்பையா செட்டியாரவர்கள் சங்கம், அவைகளின் கடமை, அவைகளினால் உண்டாகும் நன்மைகள் முதலானது பற்றி ஓர்விரிவுரைநிகழ்த்தப்பட்டது. பின்னர் அனைவருக்கும் பலபழவகைகளும், கலர், சோடா, முதலிய இனிய பானங்களும் வழங்கப்பெற்று, ஒரு குரூப் போட்டோவும் எடுக்கப்பட்டது. காரியதரிசி திருவாளர் அழ. சித. அரு. அண்ணமலை செட்டியார் அவர்களால் தலைவர் அவர்களுக்கும், விஜயம் செய்திருந்த நகரத்தாரவர்களுக்கும் வந்தனங்கூறப்பெற்று கூட்டம் காலை 10-30 மணிக்கு இனிது நிறைவெய்தியது.

## ஐக்கியமலாய்நாட்டுநாட்டுக்கோட்டைச் செட்டியார்களின் வர்த்தக சங்கம் சிலாங்கூர் சமஸ்தானக் கிளை.

பிரஜோற்பத்தி வருஷம் வைகாசித் திங்கள் 13-ம் நாள் 26-5-1931 செவ்வாய்க்கிழமை காலை 6 மணிக்கு சிலாங்கூரிலுள்ள நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் உள்ளூர் வெளியூர் அன்பருமாக சுமார் 50 பேர் மேற்படி கிளைச் சங்கத்தைத் திறக்கவும். உத்தியோகஸ்தர்கள் தேர்ந்தெடுக்கவும் ஆலோசனை செய்யக் கிள்ளான் நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் சங்கக்கட்டிடத்தில் கூடினார்கள்.

அவ்வமயம்கிள்ளான்நாட்டுக்கோட்டைச்செட்டியார்கள் சங்கக் காரியதரிசி திரு. கரு. மு. சுப்பையா செட்டியாரவர்கள் கூட்டத்திற்குத் தலைமை வகிக்கும்படி கோலாலம்பூர் திருவாளர் சுப. சொ. ராம. இராமசாமி செட்டியாரவர்களைக் கேட்டுக்கொள்ள திரு. மு. கரு. ராம. மெய்யப்ப செட்டியாரவர்கள் ஆமோதிக்க கூட்டம் திரு. சுப. சொ. ராம. இராமசாமி செட்டியாரவர்கள் தலைமையில் ஆரம்பிக்கப்பெற்று மேற்படி கிளைச்சங்கத்தைக் கிள்ளான் நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் சங்கக்கட்டிடத்திலேயே நாளது வைகாசித் திங்கள் 14-ம் நாள் 27-5-1931 காலை 9-30 மணிக்குத் திறப்பதென்றும், திறப்பு விழா கோலாலம்பூர் திருவாளர் நா. சுப. ராம. மெய்யப்ப செட்டியார் அவர்களைக் கொண்டு நடத்துவதென்றும் தீர்மானிக்கப் பெற்றது.

## தூத்துக்குடி சுயமரியாதை சங்க அங்கத்தினர்களின் விஷயாலோசனைக் கூட்டம்

### தலைவர்கட்கோர் வேண்டுகோள்.

(நமது நிருபர்.)

இங்கர் சுயமரியாதைச் சங்க அங்கத்தினர்களின் விஷயாலோசனைக் கூட்டமொன்று சென்ற 4-6-31புதன் கிழமை இரவு 7-30 மணிக்குக் காரப்பேட்டை சபா மண்டபத்தில் காரியதரிசி திரு. ராம. வைகுண்டம் அவர்கள் தலைமையின் கீழ் நடைபெற்றது. அவ்வமயம் கீழ்கண்ட தீர்மானம் சபையில் ஏகமனதாய் நிறைவேற்றப்பட்டது. தீர்மானம் நமதியக்கக் கொள்கைகள் பரவுவதற்கு இன்றியமையாததாகிய தமிழ் தினசரிப் பத்திரிகை விஷயமாகத் தலைவர்கள் எடுத்துள்ள தீவிர முயற்சியை இக்கூட்டம் மனமுவந்து பாராட்டுவதோடு பத்திரிகை சென்னையில் வைத்து நடத்தப்பட வேணடுமென்றும், நமதியக்கங்கண்ட கிழச்சிங்கமே கொள்கைக்கும் பொறுப்பாளியாக இருக்கவேண்டுமென்றும், கூடுமானல் "ரிவோல்ட்" என்ற ஆங்கில வாரப் பத்திரிகையையும் நடத்துவிக்கத் தலைவர்கள் முயற்சி எடுத்துக் கொள்ளவேண்டு மென்றும் இக்கூட்டம் தீர்மானிக்கிறது.

## தூத்துக்குடி யாதவர் சங்கம்.

தூத்துக்குடி ஷை வடபுறம் இராமாயண சாவடியில் ஓர் பொதுக் கூட்டம் மகா-ள-ஸ்ரீ சுந்தரபாண்டிய கோனார் அவர்களின் தலைமையின் கீழ் நடந்தது. அதில் தங்கள் ஜாதியின் முக்கிய கட்டுதிட்டப் பாடுகளைப்பற்றி பேசி குறைகளைப் போக்கடிக்க ஓர் சங்கம் அவசியம் என்றும், இப்போது ஒவ்வொரு ஜாதியிலும் சங்கங்கள் நிறுவி முன்னேறும் போது நாம் சும்மாயிருப்பது சரியல்லவென்றும், கண்ட வாலிபர்கள், உடனே சங்கம் நிறுவ வேண்டியதற்கு முயற்சி எடுத்து அடுத்த கூட்டத்தில் சங்கம் நிறுவ வேண்டும் என்பதை பேசி முடித்தார்கள். இக்காரியத்துக்கு முக்கியஸ்தர்களாக இருந்து வேலை செய்தது மகா-ள-ஸ்ரீ A. N. ரெங்கைய கோனார் முனிசிபல் கவுன்சிலர், ஷையார் தம்பி A. N. காவேரிராஜ், விக்டர் பெஞ்சமின், முதலியவர்களாவர்.

## நன்கொடை.

பிரஜோற்பத்தி வருஷம் வைகாசி மாதம் 31-ந் தேதி காரைக்குடி உயர் திரு.மலே. சு. இராமய்யர் அவர்கள் எங்கள் நாகர் வாசகசாலைக்கு ரூபாய் இருநூறு விலை மதிப்புள்ள புத்தகங்களும் இரண்டு இரும்பு நாற்காலிகளும் நன்கொடையாகத் தந்திருக்கிறார்கள். அவர்கட்கு எங்கள் நன்றியறிதலைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம் என்று விளம்பர அதிகாரி வை. பாலசுப்பிரமணியன் எழுதுகிறார்.

## தூத்துக்குடி.

**சீர்குடி வேளாளர் சங்கம்:—** ஷை சங்கத்தின் பொதுக்கூட்டம் 14-6-31 ஞாயிறு மாலை 7 மணிக்கு திரவியபுரம் பார்வதியம்மன் கோவில் தெரு முன்பாக திரு. மா. தெ. ஆறுமுகம் பிள்ளை தலைமையின் கீழ் நடைபெற்றது. அவ்வமயம் திரு. ந. சுப்பிரமணிய பிள்ளை என்பவரால் "அறத்தின் மாண்பு" என்பது பற்றி ஓர் சொற்பொழிவு நிகழ்த்தப்பட்டது. பின் உபகாரியதரிசியாக திரு. செல்லையா பரமானந்தம் பிள்ளை என்பவரை தேர்ந்தெடுத்து தலைவர் முடிவுரையுடன் கூட்டம் கலைந்தது. இதில் வாலிபர்கள் ஊக்கம் எடுத்து நடத்தியது பாராட்டத்தக்கது.

## வியாபார மந்தத்தின் பலம்.

உலக வியாபார மந்தத்தை முன்னிட்டு ஹாம்பக்-அமெரிக்கா கப்பல் கம்பெனி இரு கப்பல்களை விடாது நிறுத்திவிட்டது. ஜெர்மன் லாயட் கம்பெனி, 4 கப்பல்களை நிறுத்திவிட்டது.

## ரப்பர் உற்பத்திக்கட்டுப்பாடு.

ரப்பர் உற்பத்திக் கட்டுப்பாட்டைப் பற்றி ஹாலந்திலுள்ள "ஹாண்டல்ஸ் பிளாட்" என்ற பத்திரிகை எழுதுவதாவது:— ரப்பர் உற்பத்தியை யொட்டி ஏற்பட்டுள்ள கட்டுப்பாடு விதிகள் எதிர் பார்த்ததைக் காட்டிலும் திருப்திகாமாகவே இருக்கின்றன. சிறிய தொழிற்சாலைகள் யெல்லாம் மூடிவிடுவதென்ற யோசனைக்கு எதிர்ப்பு மிகவும் அதிகமாக இருந்ததால், அந்த யோசனையை விட்டுவிட்டார்கள். ஆனால் அதை யொட்டிய பங்கு திட்டத்தை சம்பந்தப்பட்ட யாவரும் ஆதரிக்கலா மெனத் தெரிகிறது. தேசிய ரப்பர் உற்பத்தியும் ஏற்றுமதியுமாக வருஷத்திற்கு சாய்ந்த ரப்பர் 90,000 டன்களுக்கு மேல் போகக் கூடாதென்பதும் தொழிற்சாலைகளில் 1929-ம் வருஷம் எவ்வளவு ரப்பர் உற்பத்தியாயிற்றோ அதில் 100க்கு 75 வீதம் தான் உற்பத்தி செய்யவேண்டு மென்பதுமே அந்த திட்டத்தின் நோக்கமாகும். தொழிற்சாலைகளில் ரப்பர் சேர்ந்து போகாமலிருக்க வேண்டிய முறைகளையும் எடுத்துக் கொள்ளுவார்கள். இந்த திட்டத்தை டச்சு சர்க்கார் ஒப்புக் கொண்டால் ரப்பர் உற்பத்தி செய்வோர் பின்னர் ரப்பர் தோட்டக்காரர்கள் சங்கத்துடன் கலந்து கொண்டு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யலாம். அவ்விதம் செய்யும் பட்சத்தில் இங்கிலீஷ் ரப்பர் தோட்டக்காரர்களும் ஷை யார்களுடன் ஒத்துழைப்பார்கள்.

# வெளிநாட்டுச் செய்திகள்.

ஜெர்மனியிலுள்ள 'ரோத்தன்பர்க்' என்னுமிடத்தில் குடிகாரர்களின் மூந்நூறும் ஆண்டுவிழா நடத்தப்பட்டது. 1631ம் வருடம் இந்த ஸ்தாபனம் 'தியிலி' என்பவரை தலைமையாகக் கொண்டிருந்தது.

0 0 0

ஸ்காட்லாந்தில் 1¼ மாதங்களுக்கு முன் எடுத்த ஜனத்தொகை கணக்கின் படி 19 வருஷங்களுக்கு முன்னிருந்ததைக் காட்டிலும் இப்போது 39,943 பேர்கள் ஜனத்தொகையில் குறைந்திருக்கின்றனர். இதற்கு காரணம் ஜனங்கள் நகரங்களுக்கு ஏராளமாகச் செல்வதேயாகும். கிளாஸ்கோ நகரில் முன்னர் இருந்ததைக்காட்டிலும் 36,890 பேர்கள் அதிகமாகியிருக்கின்றனர்.

0 0 0

துருக்கிதேசம் அங்குள்ள மூன்று முக்கிய லாகிரி வஸ்துக் கடைகளை மூடிவிட்டது. அதோடு கம்பனி டைரக்டருக்கு 18 ஆயிரம் பொன் அபராதமும் விதித்தது. இக்கம்பனி தன் 90 கிலோகிராம் எடையுள்ள 'மார்பைனை' ஆகாயவிமானத்தில் ஐரோப்பாவுக்குக் கொண்டுபோக முயன்றது. அதற்காகவேதான் மானேஜர் தண்டனை விதிக்கப்பட்டிருக்கிறார்.

0 0 0

எகிப்து சர்வகலாசாலையைச் சார்ந்த சாலிம்ஹாசன்கிஸா ஸ்தூபிசானுக்கருகில் சுமார் 20 சமாதிகளைக் கண்டுபிடித்திருக்கின்றார். அவைகளில் கி. மு. 2691 ஆண்டு வரை ஆட்சி செய்த ஒரு அரசனின் மருமகனின் சமாதிடம் சேர்ந்திருக்கிறது.

0 0 0

அமெரிக்க சர்க்காருக்கு காப்பான் தலைமையில் நடைபெறுகின்ற கொள்ளைக் கூட்டத்தை அடக்கமுடியாமலிருப்பதால் அவர்கட்கு வரும் வருமானத்திற்கு வரி விதித்து அடக்கமுயல்கின்றார்கள். காபோனுக்கு வருஷத்தில் 230000 பொன் வருமானம் வருகின்றது. அவன் வரிச் செலுத்தாததால் கைது செய்யப்பட்டிருக்கிறான்.

0 0 0

டிருக்குக் காநதேஷிலுள்ள லீவா சமூகத்தார் மாப்பிள்ளை கல்யாணத்திற்காகப் பணங்கொடுப்பதென்றிருந்த வழக்கத்தை மாற்றி 400 ரூபாய்க்குப் பதிலாக 2 அணா கொடுத்தால் போதுமென்று விவாக முறையை திருத்தியிருக்கின்றனர்.

0 0 0

சமதர்ம ஆட்சி ஏற்பட்ட ஸ்பெயின் தேசத்தில் லார்டு முதலிய பட்டங்களை ஒழித்துவிட்டு இனி அவைகளை எவ்விதத்திலும் பயன்படுத்தக் கூடாதென்று தீர்மானித் திருக்கின்றார்கள்.

0 0 0

ஈராக் பிரதேசத்திலுள்ள மோசூல் எண்ணெய்ச் சுரங்கங்களி லிருந்து மத்திய தரை கடல்வரை டைப்புகள் போட்டுச் செல்வது சம்பந்தமாக இராக்பெட்ரோலியம் கம்பெனிக்கும் இடையிலுள்ள சர்க்கார்களுக்கும் சமீபத்தில் ஒருவித ஒப்பந்தம் ஏற்பட்டது. குழாய்கள் போடும் வேலை ஆரம்பமாகி விட்டது. கிர்கானில் குழாய்கள் இரண்டாகப் பிரிந்து ஒன்று திருப்போலிக்கும் மற்றொன்று ஹைபாவுக்கும் போகும்.

0 0 0

பிரபல வானசாஸ்திரியான மிஸ்டர் வில்லியம் பெரடரிக் டென்னிங் தமது 83-வது வயதில் பிரிஸ்டலில் காலமானார். இவர் 5 புதிய நக்ஷத்திரங்களைக் கண்டுபிடித்தவர். மேலும் தமது ஆராய்ச்சிகளைப் பற்றிய பல நூல்களையும் வெளியிட்டவர்.

0 0 0

லண்டன் வேலையில்லா கஷ்ட நிவாரணஇன்ஷூரன்ஸ்நிதிக்கு சர்க்கார் பொக்கிஷத்திலிருந்து 8,56,20,000 பொன் கொடுத்திருக்கிறார்கள். இன்னும் 43,80,060 பொன் கொடுக்கப்படும்

0 0 0

போசிடான் என்ற நீர்மூழ்கிக் கப்பல் சீனாவிற்குச் சமீபம் கடலில் மூழ்கிவிட்டது. அதிலிருந்த 18 பேர்கள் மாண்டு போயினர். கப்பலை மீட்க ஒருவாரம் ஆகுமென்று தெரிகிறது.

0 0 0

சென்றவாரம் லண்டன் செயிண்டு எட்மண்ட்ஸ் தேவாலயத்தில் திரு. வி. எப். ஆண்ட்ரூஸ் செய்த ஓர் பிரசங்கத்தில் மகாத்மா காந்தி தென்னாப்பிரிக்காவில் போவர் யுத்தத்தின்போது அரிய ஊழியம் செய்தாரென்றும், பீரங்கிக் குண்டு மாரிகட்கிடையே சென்று காயம்பட்டோரைக் காப்பாற்றினாரென்றும் திரு. ராபர்ட்ஸின் ஒரே குமாரனை மீட்டுக் கொண்டு வந்தாரென்றும் கூறினார். அதனை "மார்னிங் போஸ்டு" என்ற பத்திரிகை கண்டித்து வி. எப். ஆண்டிரூஸ் சொல்வது முழுதும் பொய்வார்த்தைகள் என்றும் தமக்கு நம்பத்தகுந்த விடத்திலிருந்து ஆண்டிரூஸ் கூற்றுக்கு மறுப்பான செய்திகள் கிடைத்திருக்கின்றன வென்றும், காந்திஜி குண்டுகள் வருகிற இடத்திற்குத் தன்னை அனுப்பக் கூடாது என்று முதலிலேயே கேட்டுக் கொண்டாரென்று தளகர்த்தர்கள் கூறுகின்றார்களென்றும் எழுதிற்று. அதனை மறுத்து திரு. ஆண்டிரூஸ் ஜே. டோக்கவர்கள் எழுதிய 'தென்னாப்பிரிக்கா இந்தியதேசபக்தர்' என்ற புத்தகத்தையும் மகாத்மாவின் சுய சரித்திரத்தையும் ஆதாரமாகக் காட்டினார்.

0 0 0

காபூல் நகரத்தில் தற்கால முறைப்படி புதிய ஆஸ்பத்திரி கட்ட அமீர்நாதர்கான் அரசாங்கப்பணத்திலிருந்து 2 லட்சம் ரூபாயும் தன் சொந்த ஆஸ்தியிலிருந்து அதிக திரவியமும் நன்கொடையளித்திருக்கிறார்.

கல்கத்தாவில் கூடப்போகும் அகில இந்தியத்தொழிலாளர் மகாநாட்டுக்கு பிரிட்டிஷ் பொதுஉடமைக் கட்சிக்காரர் தங்கள் பிரதிநிதியொருவரை அனுப்பவெண்ணி திரு. வில்லியம் சாலஞ்சை தேர்க்தெடுத்தனர். அவர் இந்தியாவுக்குப் போக பாஸ்போர்டு கேட்டபோது அரசாங்கத்தார் மறுத்துவிட்டனர்.

0 0 0

பர்மாவிலுள்ள சூல்பகோடா துறைமுகத்தில் "சிந்துவான்" என்ற கப்பலில் ஜூன் 12 ந்தேதி காலை தீப்பிடித்ததில் 6 பர்மியரும் 6 இந்தியர்களும் காயமடைந்தனர். தீயையணைக்க ஒருமணிநேரமாயிற்று.

0 0 0

ரங்கூனுக்கு மேற்குப்புறமுள்ள கெம்மன்டைன் என்ற இடத்திலிருக்கும் ஒரு கிருஸ்தவ ஆலயத்திலிருந்து போலீசார் 405 தோட்டாக்களையும் அவைகளை உற்பத்தி செய்யும் உபகாணங்களையும் கைப்பற்றினர்.

0 0 0

மிஸஸ் கிளேயர் ஷெரிடன் என்ற பெயர்போன நடிகமாது சஹாரா மணலாரணியத்திலேயே தங்கத் தீர்மானித்துவிட்டாள். அவள் தனக்கும் தனது குழந்தைகட்குமாக ஒரு "ஓயாஸி"ஸில் ஒரு வீடுகட்டியிருக்கிறாள்.

0 0 0

பிரிட்டிஷ் உள்நாட்டு மந்திரியின் அறிக்கைப்படி ஞாயிற்றுக்கிழமைகளில் நடைபெறுகின்ற சினிமாக்கள் 2 லட்சம் பவுனை பிரிவு செய்கின்றதாகத் தெரிகிறது.

0 0 0

பிரிட்டனும் ஜப்பானும் 1924ஐ விட 1930 வருஷம் சேனைச் செலவில் நூற்றுக்கு 10ம் ஒன்றரையும் விகிதம் குறைவைக் காட்ட இத்தலி, அமெரிக்கா, பிரான்ஸ் ஆகியவைமட்டிலும் 36, 28, 11 விகிதம் கூடுதலைகாட்டியிருக்கின்றது.

0 0 0

இந்தியாவின் இங்கிலாந்துக்கடன் இன்றுவரையிலும் 39 கோடி பவுன் ஆகும்.

0 0 0

நடப்போர் இயக்கம் இங்கிலாந்தில் காட்டுத் தீப்போல் பரந்துவருகிறது. புதிதாக ஏற்படுத்தப்பட்டிருக்கிற இளைஞர் ஹாஸ்டல் சங்கத்தார் 50 ஹாஸ்டல்களை இவ் வியக்கத்தில் சேர்த்திருக்கின்றார்கள்.

0 0 0

பண்டைக் காலத்தில் பலூண்கள் பூமியிலிருந்தே காற்றை சேகரித்துக்கொண்டு போவது வழக்கம். ஆனால் இப்போது இங்கிலாந்தில் ஆகாயத்திலேயே காற்றைச் சேர்க்கும் பலூண்கள் செய்யப்படுகின்றன.

0 0 0

கல்வி யறிவுடைய ஒரு இதாலிப்பெண், தான் கணவனென்று நம்பிய ஒரு மனிதனிடம் 5 வருஷம் மனைவியாக வாழ்ந்தாள். இந்த இதாலிப் பெண்ணின் உண்மை கணவனான புரொபஸர் கெனல்லா என்பவர் சென்ற போரின்சமயம் காணாமற்போனார். இப்பெண் 1926-ம் வருஷம் இப்பொழுது 5 வருஷமாய் தன்னுடன் வாழ்ந்து வரும் ப்ரூனேரி என்னும் தப்பித்து ஓடிவந்த கைதியின் படத்தைப் பார்த்ததும், இவர்தான் தம் கணவனாகிய கெனல்லாவென்று எண்ணி அவரைத் தன் வீட்டிற்கு அழைத்துச் சென்றாள். இவ்விருவருக்கும் இரண்டு குழந்தைகள் பிறந்தனவாம். இந்த சமயம் ப்ரூனெரி என்பவருக்கு புத்தி சுவாதீனமில்லையாம். இப்பொழுது புத்தி சுவாதீனமுண்டாகித் தன் குடும்பத்தாரை கண்டு கொண்டாராம். ஆனால் மிஸஸ் கெனல்லா என்னும் மாது ப்ரூனேரி தான் தன் கணவனென்று நம்புவதால் இதாலி பிரதம நீதிஸ்தலத்தில் அப்பீல் செய்ய தீர்மானித்திருக்கிறாள்.

0 0 0

ஸ்பெயினில் அரசர் கக்ஷியைச் சேர்ந்தவர்களின் பொதுக்கூட்டத்தின் பயனாக அயிக்காவலில் பலத்த கலவரங்கள் நேரிட்டன. அரசர் சார்பாக செய்யப்பட்ட ஆவாரத்தில் கிராமத்தினர் கோபமடைந்து பரிகசித்தும் கூச்சலிட்டும் பூனைபோல கத்தியும் தடை யுண்பண்ணினர். அரசர் கக்ஷியை சேர்ந்த பலர் கைத்துப்பாக்கிகளை யெடுத்து கூட்டத்தில் துப்பாக்கி பிரயோகஞ் செய்தனர். உடனே கைகலந்த சண்டை நேரிட்டது. முடிவில் அரசர் கக்ஷியை சேர்ந்தவர்கள் ஒரு வீட்டில் போய் புகுந்து கொள்ள நேரிட்டது. இவர்கள் பிறகு போலீசார் பாதுகாப்பில் வெளியே சென்றனர். அரசர் கக்ஷியினரின் இரண்டு மோட்டார்கள் தெருவில் தீவைத்துக் கொளுத்தப்பட்டன.





# மலாய் நாட்டிற்குத் தனிப் பிரசங்கமா?

சிங்கப்பூரிலிருந்து வெளியாகும் முன்னேற்றம் பத்திரிகையில் இவவாறு எழுதப்பட்டிருக்கின்றது.

சிறம்பான் விவேகானந்த மாணவ சபையின் ஆதரவின் கீழ் 26—5—31-லும், 27—5—31-லும், "தமிழின் பெருமை", "சீர்திருத்தம்" என்னும் பொருள்கள் பற்றி இரண்டு சொற்பொழிவுகள் நடைபெற்றன. கூட்டத்திற்கு திருச்சி, விஸ்வநாதம் அவர்களும் ஏராளமான பிரமுகர்களும் வந்திருந்தார்கள்.

26—5—31 மாலை 6-30 மணிக்கு கூட்டம் ஆரம்பித்தது. சபையின் உதவித் தலைவர் தலைமை வகித்து திருவாளர் ராய. சொக்கலிங்கம் அவர்களை கூட்டத்திற்கு அறிமுகம் செய்து "தமிழின் பெருமை" யைப்பற்றி பேசுமாறு கேட்டுக்கொண்டார்கள். சொற்பொழிவாளர் எழுந்து தமிழ் கடவுள் அருளிய மொழியல்லவென்றும் மற்ற மொழிகள் எப்படி உண்டாக்கப்பட்டனவோ அப்படியே தமிழும் உண்டாக்கப்பட்டிருக்குமென்றும் கடவுள் அவதாரம் செய்து தமிழ் மொழியை உண்டாக்கினர் என்பதை நம்பமுடியாதென்றும், தமிழ் பல அற்புதங்களை செய்து காட்டியிருக்கிறது என்பதற்கு ஆதாரமில்லையென்றும் இவைகளால் தமிழுக்கு நான் பெருமை கூற முடியாது என்றும் கூறினர்.

பின்னும் பேசுகையில், "இலக்கியம் இலக்கணம், இயற்கை அழகு, உள்ளத்திலுள்ளதை வெளியே எடுத்துச் சொல்லும் தன்மை முதலிய சிறப்புகள் தமிழுக்கு இருப்பதாலேயே நான் பெருமை கூறுகிறேன். திருக்குறள் குற்றமுடையதுதான். பெண்மை விஷயத்தில் திருவள்ளுவர் பெருந் தவறு செய்துவிட்டார். இதற்காக நான் குறைகூற மாட்டேன். பெரிய புராணம் எனக்கு உடன்பாடல்ல; என்றாலும் அதில் கலப்பு விவாகம், விதவா விவாகம், சாதி ஒழித்தல் முதலிய இருப்பதால் அதை நான் ஆதரிக்கிறேன். பெரிய புராணம் சீர்திருத்தக்காரர்களுக்கு பெரிதும் பயன்படும். ராமாயணம் உண்மையாக நடந்ததென்று சொல்ல முடியாது. கம்பர் கருத்துக்களை அப்படியே நம்பவேண்டுமென்று நான் சொல்லவில்லை, அப்படி சொல்லுகிறவன் கம்பனுடைய மூட பக்தன் ஆவான். மற்றபடி அதில் இயற்கை அழகுகளிருப்பதால் நான் அதை ஆதரிக்கிறேன். கம்பராமாயணத்தை கொளுத்த வேண்டுமென்று சொல்லுகிறவர்கள் தமிழ் படிக்காதவர்கள்தான். தமிழின் இனிமையை அறியாதவர்கள்தான் அவ்வாறு கூறுவார்கள்.

கம்பராமாயணத்தில் ஒரு பாடலுண்டு அதாவது:—இராமர் சீதையை தேட அநுமாரை அனுப்பும் பொழுது பொதிய மலையின் வழியாக போகாதே, அங்கே முனிவர்கள் பலர் தமிழை ஆராய்ச்சி செய்து கொண்டிருக்கிறார்கள், நீ போனால் அவ்விடத்திலுள்ள தமிழின் இனிமை உன்னைக் கவர்ந்துவிடும், சீதையை தேட முடியாது என்பதாகும். இப்பாடலினால் கம்பர் தமிழ் இனிமை எவ்வளவு அழகாக கூறியிருக்கிறார். கம்பர் ராமாயணமும், தமிழ் மொழியின் பெருமை விளக்கும். மற்றவைகளை நாளை கூறுகிறேன் எனச் சொல்லி அமர்ந்தார்.

சபைத் தலைவர் சொற்பொழிவாளருக்கு நன்றிகூறி நாளையதினம் "சீர்திருத்தம்" என்பதுபற்றி பேசுவார்களென்று அறிவிக்கப்பட்டதும் கூட்டம் கலைந்தது. கூட்டத்திற்கு வந்திருந்தவர்கள் திரு. ராய. சொக்கலிங்கத்தின் கொள்கையைப்பற்றி திருச்சி விஸ்வநாதத்தை வினவினார்கள். அதற்கு விஸ்வநாதம் பேச்சு மிக நன்றாயிருந்ததென்றும் இரண்டொன்றைத் தவிர மற்றவைகளனைத்தும் ஒப்புக் கொள்ளத்தக்கதேயென்றும் ஆனால் இம்மாதிரியான பேச்சும், எழுத்தும் இந்தியாவிலும் ஊழியன் பத்திரிகையிலும் கையாளப்படுமானால், சீர்திருத்தக்காரர்கள் ராய. சொக்கலிங்கம் அவர்களையும் ஊழியன் பத்திரிகையையும்மறுக்கும்படி நேர்ந்திராது என்றும்இவர்தனதுபிடிப்பிலிருந்துவிடுபட்டு பேசிய பேச்சை இன்றுதான்நேரில்கண்டு மகிழ்ந்தேன் என்றும் கூறினர்.

27—5—31 இன்று மாலை விவேகானந்த வாசகசாலையில் ராய. சொக்கலிங்கம் அவர்களும் திருச்சி விஸ்வநாதம் அவர்களும் பேசுவார்களென்று செய்தியறிந்து காலையிலிருந்தே ஜனங்களுக்குள் உற்சாகமும், பரபரப்பும் ஏற்பட்டிருந்தது. நேற்றைவிட இன்று அதிகமான கூட்டமிருந்தது. 'சீர்திருத்தம்" என்பது பற்றி பேசமுதலில் திரு.ராய.சொக்கலிங்கம் அவர்களை தலைவர்கேட்டுக்கொண்டார். திரு. ராய.சொக்கலிங்கம் அவர்கள்எழுந்திருந்துகம்பராமாயணத்தை விரிவாகப்பேசி அதனுள்ளே சாதி ஒழித்தல் வேடனையும் சகோதரனாகக் கொள்ளல் முதலிய சீர்திருத்தங்கள் அடங்கியிருக்கின்றன. கம்பராமாயணம் நல்ல நூல். சீர்திருத்தக்காரர்களுக்கு வேண்டியது. பெரிய புராணத்திலும் சாதிவித்தியாசம் ஒழிக்கப்பட்டிருக்கிறது என்று பேசிதனக்கு உடல் நலமில்லாமையால் அதிகமாக பேசமுடியவில்லையென்று கூறி என்னுடைய பேச்சுகளில் குற்றமிருந்தால் நியாய வாயிலாக எடுத்துக் காட்டி மறுத்தால் ஒப்புக் கொள்வேனென்றும், ஆளைக் குறித்து வசை கூறுவது நல்லதல்ல என்றும் சுயமரியாதைக்காரர்கள் தன்னுடைய கொள்கையை மறுக்காமல் தன்னைத்தாக்கி எழுதுகிறார்களென்றும் உதாரணமாக முன்னேற்றம் பத்திரிகையில் என்னுடைய சொற்பொழிவைப்பற்றி நியாயமற்ற முறையில் கண்டித்து எழுதியிருந்தாகவும் கூறி அமர்ந்தார். எதிர்பார்த்தபடி அவருடைய சொற்பொழிவில் சீர்திருத்தம் ஒன்றும் காணப்படவில்லை. சுருக்கமாகக்கூற வேண்டுமானால் அது ஒரு கம்பராமாயணப் பிரசங்கமாகவே முடிந்ததென்று கூறலாம்.

சபைத் தலைவர் எழுந்து ராய. சொக்கலிங்கம் அவர்கள் கம்பராமாயணத்திலும், பெரிய புராணத்தினும் உள்ள சீர்திருத்தங்களை வெகு விரிவாகக் கூறினதற்காக நாம் நன்றி செலுத்துவோம் எனக்கூறி இந்த தலையங்கத்தைப்பற்றி திருச்சி, விஸ்வநாதம் அவர்கள் 45 நிமிஷம் பேசுவார். நீங்கள் அதுவரைக்கும் இருப்பதாயிருந்தால் உங்கள் அபிப்பிராயத்தை தெரிவிக்க வேண்டுமென்று கேட்டவுடன் சபையோர்கள் அனைவரும் ஏகோபித்து பலத்த கரகோஷம் செய்யவே தலைவர் அவர்கள் திருச்சி, விஸ்வநாதம் அவர்களை "சீர்திருத்தம்" என்ற பொருள்பற்றி பேசும்படி கேட்டுக் கொண்டார்.

## ஒரே மேடையில் இருகொள்கையாளர்கள்.

"ராய. சொக்கலிங்கமும் திருச்சி விஸ்வநாதமும்".

### திருச்சி விஸ்வநாதம் அவர்கள் சொற்பொழிவு.

அன்பர்களே!

எதிர்பாராத விதமாக உங்கள் முன் வந்து நிற்கிறேன். நீங்கள் என்னைக் கட்டாயப்படுத்தி இம்மேடைமீது ஏற்றிவிட்டீர்கள். மாறுபட்ட கொள்கையுடைய இருவரை ஒரு மேடைமீது ஏற்றி நீங்கள் ஏதாவது இன்ப மனுபவிக்கலாமென்றிருந்தீர்களானால், நீங்கள் ஏமாந்து போவீர்கள். நேற்றும் இன்றும் நண்பர் திரு. ராய. சொக்கலிங்கம் அவர்கள் பேசிய பேச்சு எனக்கு மகிழ்ச்சியைக் கொடுத்தது. எங்களுக்குள் எவ்வித அபிப்பிராய பேதமுமில்லை. சீர்திருத்தத் துறையில் நாங்கள் சற்று முன்னணியில் நிற்கலாம். அவ்வளவேயன்றி நாட்டிற்கு பொதுஜன சேவை செய்வதில் நாங்களிருவரும் சகோதரர்களேயாவோம். இதனால் சில நாடகங்களைப்போல போட்டாபோட்டியாக வெண்ணி நீங்கள் ஏமாந்துவிட வேண்டாமென வேண்டிக்கொள்ளுகிறேன்.

நான் யாரையும் குறிப்பிட்டு குறை கூறினதில்லை. ஆனால் உண்மையைக்கூற தயங்கினதுமில்லை. என்னுடைய பேச்சுகளில் மாறுபட்டக்கருததுக்கள் சில வருமானால் அதைக் குறிப்பிட்ட யாரையோ குறித்துக் குறை கூறுவதாக எண்ணிவிட வேண்டாம். என்னுடைய உள்ளத்தில் தோன்றுபவைகளை எடுத்துக்கூற எனக்கு உரிமையுண்டு. இங்கு கூடியுள்ள நீங்கள் அனைவரும் கல்வியறிவுள்ள பெரியார்களாகையினாலும், பர்மா மக்கள் இக்கூட்டத்திலில்லாமையினாலும், மாறுபட்ட கருத்துக்களை பகிரங்கமாக வெளியிடலாமென நினைக்கிறேன்.

### சீர் திருத்தம் வேண்டியது தானா?

சீர்திருத்தம் இக்காலத்திற்கு மிகவும் இன்றியமையாதது. உலகில் முன்னேற்றம் அடைந்த நாடுகளெல்லாம் சீர்திருத்தத்தையே அஸ்திவாரமாகக் கொண்டிருக்கின்றன. சீர்கேடடைந்த துறைகள் பல நமது நாட்டிலிருப்பதாலேயே சீர்திருத்தம் இக்காலத்திற்கு மிகவும் இன்றியமையாததாகும். சீர்திருத்தக்காரர் இருவகைப்படுவர். ஒருவகை பேச்சுச் சீர்திருத்தக்காரர்; மற்றொருவகை செய்கை சீர்திருத்தக்காரர் எனக் கூறலாம் இங்கு பேச்சு சீர்திருத்தக்காரரைப்பற்றி சொல்லப்போவதில்லை.

### சீர்திருத்த இயக்கம் மூவகைப்படும்.

1. பழுது பார்ப்பது. 2. ஒன்றை அழித்து மற்றொன்றை உண்டாக்கிக் கொள்வது. 3. சீர்கேடற்றதை அடியோடு அழிப்பது என மூவகை சீர்திருத்த இயக்கங்கள் இன்று இந்தியாவில் நடந்து வருகின்றன.

### எத்துறையில் சீர்திருத்தம் வேண்டும்.

சீர்திருத்தம் செய்யப்பட வேண்டிய துறைகள் பலவாகும். அவற்றை முறையே நாட்டு சீர்திருத்தம், மொழியில் சீர்திருத்தம், சமயத்தின் சீர்திருத்தம், சமூகத்தின் சீர்திருத்தம், சாதியில் சீர்திருத்தம், சடங்கில் சீர்திருத்தம், நூல்களில் சீர்திருத்தம், பழக்கத்தில் சீர்திருத்தம், வழக்கத்தில் சீர்திருத்தம் என பல பட விரித்துக் கூறலாம். எல்லாவற்றையும் பேச எனக்கு கொடுத்த காலம் போதாது; என்றாலும் சிலவற்றையாவது கூறுகிறேன் எனக் கூறி சமயம், மொழி, சாதி, தீண்டாமை, சடங்கு, முதலியவைகளைக் குறித்து விரிவாகவும் விளக்கமாகவும், அநேக சான்றுடன் பேசி முடித்தார். ஒவ்வொரு பிரிவுகளுக்கும் கூட்டத்தினர் தங்களுடைய சம்மதத்தையும் மகிழ்ச்சியையும் அடிக்கடி கைதட்டுவதின் மூலம் தெரிவித்தார்கள். கடைசியாக மொழியில் சீர்திருத்தம் என்பதுபற்றி பேசியதாவது:—தமிழ் மொழியின் பெருமையைக் கூறிக்கொண்டிருக்கும் சாலம் இதுவல்ல. தமிழ் தன்னைப் பயின்றவர்களுக்கு செல்வ வளர்ச்சியைக் கொடுக்கவில்லை. கொடுத்திருந்தால் இந்தியாவிலிருந்தும் யாழ்பாணத்திலிருந்தும் இவ்வளவு தமிழ் மக்கள் இக்நாட்டிற்கு வந்திருக்க வேண்டியதில்லை. தமிழ் படித்த புலவர்களின் கதியும் அதோகதிதான். இதற்கு தமிழ் புலவர்களின் தரித்திர சரித்திரம் என்ற நூலே போதிய ஆதாரமாகும். பிறநாட்டு மொழிகளெல்லாம் பணப்பெட்டிகளையும் பேங்குகளையும் ஆராய்ச்சி செய்கிறது என்று சொன்னால் தமிழ்மொழி பொதிய மலையில் ஆராய்ச்சி செய்யப்படுவதாக கம்பராமாயணத்திலிருக்கிறது என்றபதில் யாருக்கு வேண்டும்? "தொண்டர் நாதனை தூதிடை விடுத்ததும், முதலை யுண்டபாலனை அழைத்ததும், எலும்பு பெண்ணுருவாய்க் கண்டதும், மறைக்கதவினைத் திறந்ததும் கன்னி தண்டமிழ்ச் சொலோ மறுபுலச் சொற்களோ சாற்றீர்" என்ற பாடல் மிக இனிமையாகத் தானிருக்கிறது. இப்பாடலைக் கொண்டு நாம் தமிழுக்கு பெருமை கூற வேண்டியது தான். ஆனால் "ஆகாய வூர்தியைக் கண்டதும், ஐயாயிரம் மையில்கள் பேசவும் சப்மெரைனைக் கண்டுபிடித்ததும், 'செத்தவர்களை எழுப்பிப் பேசச் செய்வதும் ஆங்கில சொற்களோ மறுபுலச் சொற்களோ சாற்றீர்" என்று ஒரு ஆங்கிலேயன் கேட்டுவிட்டால் அங்கு நிற்க முடியுமா? தமிழின் பழம் பெருமைகளை இக்காலத்தில் கூறிவருவதினாலேயே தமிழ் மொழி பிற்போக்கடைந்து விடுகிறது. உள்ளத்திலே யுள்ள உணர்ச்சியை தாராளமாக வெளியில் எடுத்து சொல்லுவதில் தமிழ் மொழி தலை சிறந்ததென்று பெருமை சொல்லப்படுகிறது. ஆனால் இவ்வளவு வலுவான மொழியைக்கொண்டு கண்டுபிடிக்கப்பட்டது என்ன? என்றால் பதில் சொல்லத் தவிக்கிறோம். உள்ளத்திலேயுள்ளதை வெளியில் எடுத்துச் சொல்ல யோக்கியதை யில்லாத பிறமொழிகள் தான் இன்றைய தினம் உலகத்திலேயே ஆச்சரியப்படத் தகுந்த பல அபூர்வ செயல்களை கண்டுபிடித்திருக்கின்றன. ஆகவே தமிழ் மொழி பழங்காலத்தில் பெருமையோடு இருந்திருக்கலாம் நாமும் தமிழ் மக்களாதலினாலே தமிழ்த்தாய்க்கு நன்றுகூறி தமிழுக்கும்பெருமைகூறலாம்; ஆனால் உலக மொழிகளை ஒப்பிட்டுப் பார்க்கின்ற நடு நிலைமையுடைய மனிதன் தமிழ் மொழிக்கு பெருமைகூற முடியாது. கூறுவதானால் சிறுமையைத் தான் கூற வேண்டும்.

### தமிழன் பெருமை.

தமிழ் மொழி பெருமையுடையது என்று சொல்லுகின்ற தமிழனுடைய பெருமையைப்பற்றி சொல்ல வேண்டுவதில்லை. தன்னைப்போன்ற தமிழனை மனிதனாகவே எண்ணுவதில்லை. பிறநாட்டு மொழிகளைக் கலவாமல் தமிழ்பேசவும் தெரிவதில்லை. இந்த நிலையிலிருந்து கொண்டு நான் தமிழன் என்று பேசினால் நாட்டிற்கு என்ன பலன் உண்டாகும்.

### நூல்களின் சீர்திருத்தம்.

பிறநாட்டார்களுடைய நூல்களெல்லாம் அறிவு இயக்க சம்பந்தமானதும், பொருளாதாரத்தை உண்டாக்கக் கூடியதாகவும் கைத்தொழிலை வளர்க்கக் கூடியதாகவும், கட்புலனுக்கு எட்டாதவைகளை கண்டுபிடிக்கக் கூடியதாகவும் இருக்கின்றன என்று நாங்கூறுகிறோம்.

இதற்கு கம்பராமாயணத்தில் கவியழகும் இயற்கையழகும் இருக்கின்றதென்ற பதில் கிடைக்கின்றது. அறிவாளிகள் இதை சிந்தித்துப் பார்க்கவேண்டும். மேல் நாட்டார்கள் ஆகாயக் கப்பலில் பறக்கின்றார்கள்என்றால்கம்பராமாயணத்தள் இந்திரஜித்து மேகத்தில் பறந்து சண்டை செய்திருக்கிறான் என்று சொல்லுகிறார்கள். அவன் பறந்தான், நீ பறக்க முடியுமா வென்றால் நான் தான் கஞ்சிக்கு ஆலாய் பறக்கின்றேன் என்று பதில் சொல்லுகிறான். ஆமிஜான்சன் என்ற 22-வயதுள்ள ஆங்கிலமாது ஆஸ்டிரேலியாவுக்கு எத்தனையோ கடல்களைத் தாண்டி சென்றாள் என்று சொன்னால் அநுமார் இலங்கையைத் தாண்டினார் என்ற செய்தி கம்பராமாயணத்தில் இருக்கிறதே என்ற பதில் கிடைக்கிறது. அநுமான் தாண்டினான் உன்னால் தாண்ட முடியுமா? வென்றால் 4 அடிதாண்ட 5 அடி குச்சி வேண்டுமென்கின்றார். இப்படிப்பட்ட நூல்களை வைத்துக் கொண்டு பெருமை பேசிக்கொண்டிருக்கின்ற நாம் பிறநாட்டு நூல்களோடும் மொழிகளோடும் அரசியலோடும் போராட முடியுமா? என்பதை நீங்கள் தான் சிந்திக்கவேண்டும்.

### ராய. சொக்கலிங்கம்

நண்பர் திரு. ராய. சொக்கலிங்கம் அவர்கள் அனாவசியமாக ஒரு இயக்கத்தையும் ஒரு இயக்கத் தலைவரையும் இழுத்துப்போட்டு கம்பராமாயணத்தைக் கொளுத்த வேண்டுமென்று கூறுவதாக குறைகூறினார்கள் நான் அதற்காக வருத்தப்படவில்லை. ஏனெனில் அவர் உண்மையை யறியார். கம்பராமாயணத்தை யாரும் கவி அழகுக்காகவோ, இயற்கை அழகுக்காகவோ படிப்பதினால் குறையொன்றுமில்லை. நானும் கம்பராமாயணத்தை படித்தவன் தான். இன்னும் படித்துக்கொண்டு தான் வருகிறேன். கம்பராமாயணம் இயற்கை அழகுக்காகப் படிப்பதினால் யாருக்கும் எவ்வித தீங்கு மில்லை. இவ்வுலகமும் முழுகிப்போய்விடாது. மற்றபடி கம்பராமாயணம் படித்தால் பின்னை பிறக்குமென்பதும், படிக்கின்ற வீட்டில் செல்வம் பெருகுமென்பதும், படிக்கக் கேட்டவர்கள் மோட்சமடைவார்கள்என்பதுமானகொள்கைகள் நாட்டில் பரப்பப்பெற்றிருப்பதை நண்பர் அறியாரா என்றே கேட்கிறேன். இக்கொள்கையின்படி ராமாயணம் படிக்கின்ற வீடுகளில் சீதா கல்யாணம், பாதுகாபட்டாபிஷேகம், சுக்ரீவபட்டாபிஷேகம், விபூஷணர் பட்டாபிஷேகம், இராமர் முதலிய எத்தனை பட்டாபிஷேகங்களைக்

## காப்பிக் குடிகாரன்.

வியன்னு நகரத்தில் ஓர் காப்பிக் குடிகார னிருக்கின்றான். அவன் தினசரி சுமார் 50 சேர் காப்பி குடிக்கின்றான். அந்தக் குடிவெறியினால் அவனுடைய வருமானம் முழுதும் நஷ்டமாகிக் கொண்டிருந்தது. ஆகவே அதனை சுகப்படுத்துமாறு ஒரு டாக்டரிடம் போனான்.

அவனுடைய தந்தை ஓர் சாராயக் குடிகாரர். அவர்தம் குடிப் பைத்தியத்தால் குடும்பத்தை அழித்துவிட்டார். ஆகவே அவருடைய புதல்வன் சாராயத்தைக் குடிக்கப் பயப்பட்டான். அவன் ஒருவருஷத்தில் 900 காலன் காப்பி குடிப்பதாகக் கூறினான். இந்த 900 காலனுக்கும் செலவாகிறசினி 7 ஹண்டரட்வெயிட் காப்பிப்பொடி 90 பவுன். இப்படிக் குடிப்பதால் அவனுக்கு கொழுப்பேறவோ அல்லது இரப்பை கொழுப்படையவோ செய்யவில்லை. இப்போது டாக்டர்கள் சிகிச்சையால் அவன் குடியை எட்டுச் சேருக்குக் கொண்டு வந்திருக்கின்றார்கள்.

---

சென்னைக் கவர்னரின் அர்தரங்கக் காரியதரிசியாக மிஸ்டர் எ. டி. கிராம்பி ஐ. ஸி. எஸ். நியமிக்கப்பட்டிருக்கிறார்.

---

காட்டி எவ்வளவு பொருள்களை வாங்கி கொட்டாவிடுகின்றார்கள் என்பதையும் சிந்திக்கவேண்டும். இத்தகைய நிபவழக்கத்தை நாட்டிலிருந்து விடுவிக்க சீர்திருத்தக்காரர்கள் என்ன செய்திருக்கிறார்கள்? கொடுமைகளை ஒழிக்க வேண்டும் அல்லது கொளுத்தவேண்டும் என்ற சொல் சீர்திருத்தப் பெரியார்களுடைய வாக்கில் வராது என்று எப்படிச் சொல்லமுடியும்? குறையில்லாத நூல்களிருந்தால் நாட்டுக்கு எவ்வித கேடுமல்லை என்பதை ஒப்புக்கொள்கிறேன்.

"கம்பராமாயணத்தில் நன்மையுமிருக்கிறது. தீமையுமிருக்கிறது. இதற்காக நான் கம்பராமாயணத்தை புறக்கணிக்க மாட்டேன். பெரியபுராணத்தில் நன்மையுமிருக்கிறது; தீமையுமிருக்கிறது. சேக்கிழார் சில விடங்களில் தவறு செய்திருக்கிறார்; ஆனால் பெரிய புராணத்தை நான் புறக்கணிக்கமாட்டேன் என்ற சொற்கள் எனக்கு போதிய திருப்தியைக் கொடுக்கவில்லை. கம்பராமாயணத்திலும் பெரிய புராணத்திலும் இன்னின்ன பாடல்கள் நல்லவை என்றும் இன்னின்ன பாடல்கள் தீயவை என்றும் அவர்கள் எடுத்துக்காட்டியிருந்தால் ஒருவாறு ஒப்பலாம். அதைவிட்டு நல்லதும் உண்டு; தீயதும் உண்டு; புறக்கணிக்கக்கூடாது; அப்படியே ஒப்புக்கொள்ளவும் கூடாது என்ற சொற்கள் வாலிபர்களாகிய எங்களின் அறிவுப்பசிக்கு எவ்வாறு உணவாகும் என்பதை பெரியார்களாகிய நீங்களே சிந்தித்துப் பார்க்கும்படிக்குவிட்டு எனது சொற்பொழிவை இத்தோடு முடித்துக்கொள்கிறேன் எனக் கூறி அமர்ந்தார்.

அவைத் தலைவர் 'எழுந்த சீர்திருத்தத்தைப்பற்றி இரண்டு அருமையான சொற்பொழிவுகள் நடந்தன. முதலில் முன்னவர் பழங்கதைகளை ஆதாரமாகச் சொன்னார்கள். பின்னவர் தற்கால அநுபவத்திற்கும் அறிவுக்கும் பொருத்தமானவைகளை ஆதாரமாக எடுத்துச் சொன்னார். இருவரும் சீர்திருத்தம் வேண்டுமென்றே சொன்னார்கள். நீங்களெல்லாரும் காலத்திற்கேற்றபடி சிறிது சிறிதாக சீர்திருத்தமடைய வேண்டுமென்று விரும்புகின்றேன் என முடிவுரை கூறினர். வழக்கம்போல எட்டரை மணிக்கு கூட்டம் இனிது கலைந்தது. திருவாளர் ராய. சொக்கலிங்கம் அவர்களும், திருச்சி திருவாளர் விஸ்வநாதம் அவர்களும் கலந்து ஒருவருக்கொருவர் நன்றி கூறி பிரிந்து சென்றனர். அன்று இரவு பன்னிரண்டு மணிவரை சிறப்பாளில் முக்கியமான விடங்களில் எல்லாம் இதுவே பேச்சாகவிருந்தது.

---

## ஹென்ரி போர்டு

**2 கோடி மோட்டார்கார்கள் உற்பத்தி.**

மிச் என்னுமிடத்தைச் சேர்ந்த டபர்னில் இருக்கும் ரோக் ரினான்ட் போர்ட்மோட்டார் கிளைத் தொழிற்சாலையில் இரண்டாம் கோடியாகச் செய்யப்பட்ட வாகனம் ஹென்ரி, எட்சல்போர்ட் முதலியவர்கள் முன்பாக சென்ற ஏப்ரல் மாதம் கொண்டுவரப்பட்டுக் கொண்டாட்ட விழா வெகு சிறப்பாக நடத்தப்பட்டது.

'ஸ்ரீ ஹென்ரிபோர்ட் 20,000000' என்ற எண்ணை இயந்திரத்தின்மீது பொறித்தார். இந்த வாகனம்மற்ற பிரசித்திப்பெற்ற மூன்று வாகனங்கள் இருக்கும் 'கிரின்பீல்ட்' கிராமத்திற்குக் கொண்டுபோகப்பட்டது. முதன் முதலாக 1893-ம் வருடம் செய்யப்பட்ட வாகனமும், 1-வது கோடியாக செய்யப்பட்ட வாகனமும், கோடியே 50-வது லக்ஷத்திய வாகனமும் கிரின் பீல்டிலிருக்கின்றன.

இந்த வண்டி ஒவ்வொரு கிளை ஸ்தாபனத்திற்கும் கொண்டுபோகப்பட்டு அங்கங்கு ஒவ்வொரு வாரம் காக்ஷிக்காக வைக்கப்படும். சுற்றுப் பிரயாணம் முடிந்ததும் இவ்வண்டி கிரின்பீல்டிலுள்ள முதன் முதலாகச் செய்யப்பட்ட வண்டியுடன் நிறுத்தப்பட்டு பாதுகாக்கப்படும்.

முதலில் செய்யப்பட்ட 'காஸ்லைன் பியூகி' ஹென்ரியால் 26 மைல் வேகத்தில் தெருவில் செலுத்திக் கொண்டுச் செல்லப்பட்டபோது, அது அருகிலிருந்தவருக்கு ஆச்சரியத்தை உண்டாக்கியதுமன்றி குதிரைவண்டி, போக்கு வரத்தையும் கெடுத்துவிட்டது.

### முதல் போர்ட் வண்டி.

1893-ம் வருடம் உலகத்தில் பிரசித்திபெற்ற மூன்றுவித வண்டியில் இதுதான் முதலில் செய்யப்பட்டது. துவிச்சக்கர வண்டியின் சக்கரங்களுடன் நான்கு குதிரை ஓட்டமுள்ள இரண்டு ஸிலிண்டர் இயந்திரத்தினால் செய்யப்பட்ட முதல் வண்டிக்கும் தற்காலத்தில் (1931) செய்யப்படும் முதல் வண்டிக்கும் விசேஷ மாறுதலிருக்கின்றது. அந்த முதல் 'காஸ்லைன் பியூகி' வண்டியில் 3 காலன் பெட்ரோல்தான் விடமுடியும். மிகக் கஷ்டப்பட்டு இருவர் உட்காரும் அவ்வண்டிக்கு முதல் முதலாக உலகில் தனி லைசன்ஸ் பெற்றுக்கொண்டு திரு ஹென்ரி போர்ட் செலுத்தினர்.

தற்காலத்தில் சாலைகள் நன்றாகச் செப்பனிடப்பட்டிருப்பதால் மோட்டார் வண்டி சாதாரணமான இடங்களிலும் உபயோகிக்கப்படுகின்றது.

1915-ம் வருடம் முடிவதற்குள் 10 ஆயிரம் வண்டிகள் செய்யப்பட்டன. தொழிற்சாலையின் முன்னேற்றமான வழிகள் கண்டுபிடிக்கப்பட்டு, செய்யும் வகையிலும் மாற்றமேற்பட்டதால் 1917 வருடம் ஜூன்மாத முடிவிற்குள் 20 ஆயிரம் வண்டிகளும் 1921-ம் வருஷம் மேமாத முடிவிற்குள் 50 ஆயிரம் வண்டிகளும், 1924 வருஷம் ஜூன் மாத முடிவிற்குள் 1 கோடி வண்டியும், 1927-ம் வருடம் மே மாத முடிவிற்குள் 1½ கோடி வண்டியும் செய்யப்பட்டன.

சென்ற வருஷம் வரையில் அமெரிக்கா முழுவதிலும் 270 லக்ஷம் மோட்டார்கள் ரிஜிஸ்தர் செய்யப்பட்டதில் 200 லக்ஷம் மோட்டார்கள் போர்ட் கார்களே.

இந்த 2 கோடி வண்டிகளையும் ஒன்றின்பின் ஒன்றாக நிறுத்தினால் 48,296 மைல் நீளமிருக்கும். இவைகளை ஒரே

## கிரணங்களால் ஜுரச் சிகிச்சை.

எல்லா மனிதர்கட்கும் துன்பம் செய்வதாகிய குளிரை விஞ்ஞான அறிவால் குணப்படுத்தும் வழியைக் கண்டுபிடித்திருக்கிறார்கள்.

ஸர், ரிச்சர்டு பாகட் என்கின்ற பிஸிக்ஸ் நிபுணர் ஒவ்வொரு வீட்டிலும், ஆபிசுகளிலும், தொழிற்சாலைகளிலும் "அல்ட்ரா வயலெட் ரே" யை உண்டு பண்ணுகின்ற விளக்குகளை அமைக்கின்ற காலம் தூரத்திலில்லை என்று கூறினர்.

அத்தகைய ஒரு காலம் வரும் போது இருட்டிலும் துறந்த வெளியிலும் குளிரான விடங்களிலும் யாதும் தளர்ச்சியின்றி வேலை செய்யலாம்.

இப்போது "காகில்ஸி" னுடைய உதவியோடு மிகக் கவனமாக "அல்ட்ரா வயலட் ரே" விளக்குகள் உபயோகிக்கப்படுகின்றன.

ஸர் ரிச்சர்டு மேலும் கூறியதாவது:—நான் குறிப்பிடுகின்ற புதிய இயந்திரம், ரஸப்புகை எரிகின்ற ஒரு விளக்கும் அதனைச்சுற்றி சில நூல் போன்ற விளக்குகளும் அடங்கியிருக்கின்றது. இந்த அமைப்பு மனிதனுக்குச் சேதம் செய்கின்ற கிரணங்களை விலக்கிவிட்டு "அல்ட்ரா ரே"யை மட்டிலும் வெளிவிடுகின்றது. கடந்த இரண்டு வருஷங்களாக ந்யூகாஸில் சட்டிடத்தில் இதனை பரிசோதித்துவிட்டோம். அங்கு இரண்டு சாதாரணமான விளக்குகளை வைத்துக் கொண்டு நான்கு டெலபோன் ஆப்பரேட்டர்கள் (பெண்கள்) வேலைசெய்து கொண்டிருந்தார்கள். அந்த இரண்டு வருஷமும் ஒருமணி நேரமாவது அவர்கள் குளிர் இன்ப்ளூவென்ஸா முதலிய நோய்களால் வருந்தாமலிருக்கவில்லை. இப்போது "அல்ட்ரா ரேயினுதவியால்" அவர்களுடைய நோய் போனவிடம் தெரியவில்லை.

---

### பாம்போடு பழகேல்.

பூனா நகரில் நாராயணனென்ற ஓர் சிறுவன் வெகு திறமையாகப் பாம்புகளைப்பிடித்து விளையாடி பார்ப்பவர்கட்கு வியப்பை உண்டுபண்ணிவந்தான். எவ்விதப் பயங்கரமான பாம்புகளையும் எளிதில் பிடித்து சேபில் போட்டுக் கொள்ளவோ குல்லாயில் வைத்துக் கொள்ளவோ செய்தான். இதனை எல்லாரும் வியந்தார்கள். ஒருநாள் ஓர் மிகப்பயங்கரமான நாகத்தைப்பிடித்து வேடிக்கை காட்டிய போது நான்கு தடவை முத்தமிட்டான். நாலாம் முறை முத்தமிடும் போது அந்நாகம் ஓங்கிக் கடித்துவிட்டது. உடனே இறந்து போனான். அவனுடைய பிரேதஅடக்கத்துக்குப் பலர் வந்திருந்தனர்.

---

### 115 வயதுடைய இந்தியமாது.

முன்ஷிகஞ்சு சப்டிவிஷனல் தியோபாக் கிராமத்திலுள்ள ஸ்ரீமதி பாமாசுந்தரி தேவி என்னும் மாது தனது 115-வது வயதில் மரணமானார். மரணமாகும்வரை கொஞ்சமும் தளர்வின்றி சௌக்கியமாக இருந்தாள்.

---

மிஸ்டர் டி. டி. வாரன் ஐ. ஸி. எஸ். அவர்கள் சென்னைக் கார்ப்பரேஷன் கமிஷனராக 15-ந் தேதி சார்ஜ் எடுப்பார்.

---

இடத்தில் நிறுத்த வேண்டுமானால் கொலம்பியா ஜில்லா முழுவதையும் மைதானமாக அமைத்தாலும் போதாது.

---

## சுயமரியாதைத் திருமணம்.

27 மே, தொம்பக்குளம்

தொம்பக்குளம் வாலிபர் சமரச சன்மார்க்க சங்கத்தலைவர், திருவாளர் A. தெய்வநாயகம் அவர்கள் நடத்தி வைத்தனர்.

23-5-31 மாலை 2-30 மணிக்கு இவ்வூர் திரு. இராமசாமி நாயுடு குமாரர் திரு. அய்யலு சாமிக்கும், வெள்ளாகுளம் ருத்திரசாமி நாயுடு குமாரத்தி திருமதி எங்கம்மாளுக்கும், இவ்வூர் திருவாளர் இராமசுப்பு அவர்களில்லத்தில் திருமணம் சிறப்பாக நடந்தேறியது.

### திருமணச்சபை.

மேற் கூறப்பட்ட நண்பர் திரு. இராமசுப்பு அவர்களின் வீட்டின் முன்புறம் மணமக்கள் அமருவதற்கென அமைக்கப்பெற்ற ஆதனத்தில் மணமக்களும் மணமக்களின் திருமணத்தை நடத்துவிக்கும்படி அன்னாரின் சார்பாக கேட்டுக் கொண்ட திரு. நாரணப்ப நாயக்கர் (பஞ்சாயத்து போர்டு அங்கத்தினர்) திரு. சுப்பய்ய நாயக்கர் இவர்களிருவரும் மணமக்களின் பக்கத்திலும் வீற்றிருந்தனர். திருமண அழைப்புக்கிணங்கி சுமார் 200 பேர்கள் ஆண்களும் பெண்களுமாக விஜயம் செய்திருந்தனர்.

அவர்களில் முக்கியமானவர்கள் திருவாளர்கள் (1) P. குப்புசாமி (பஞ்சாயத்து போர்டு பிரசிடெண்டு) (2) T. பெருமாள் சாமி (பஞ்சாயத்து போர்டு வைஸ் பிரசிடெண்டு) (3) முத்துகிருஷ்ண நாயக்கர் (4) ஆ. கு. வீரசாமி (பஞ்சாயத்து போர்டு அங்கத்தினர்கள்) (5) R. அழகிரிசுப்பு (6) T. P. இராமர் (இந்து சமத்துவம் வித்யாசாலை ஆசிரியர்கள் (7) போ. கோ. பால் நாயக்கர் (8) கு. கோபாலுசாமி (9) அ. சுப்பயா (10) ச. அய்யப்ப நாயக்கர் (11) A. தெய்வநாயகம் (இந்துசமத்துவம் வித்தியாசாலை தலைமை ஆசிரியர்) ஆகியவர்களாவர். திருமண முறை—தொம்பக்குளம் திரு. இராமசுப்பு அவர்களின் வேண்டுகோளின் மேல் திரு. T. பெருமாள்சாமி அவர்கள் எழுந்து இத்திருமணத்தை நடத்தி வைக்கும்படி திரு. A. தெய்வநாயகம் அவர்களைக் கேட்டுக் கொண்டனர். பின்னர் திருவாளர் A. தெய்வநாயகம் அவர்கள் தலைமை ஸ்தானம் வகித்து மணமக்கள் முன் தோன்றி அன்னாரைச் சபையினருக்கறிமுகம் செய்துவிட்டு பேசினர்.

தலைவர் பேசியதும் மணமக்களைத் தனித்தனியே உறுதி மொழிகளைக் கூறும்படி கேட்டு அவ்வாறு அவர்கள் கூறியவுடன் பெருத்த கரகோஷங்களுக்கிடையே மணமக்கள் மாலை மாற்றிக் கொண்டனர். பின்னர் பழைய வழக்கப்படி மாங்கல்யமொன்று மணமகள் கழுத்தில் மணமகனால் கட்டப்பட்டது. அப்பால் P. குப்புசாமி அவர்கள் சுதந்திர மென்பது பற்றியும், திருவாளர் T. பெருமாள்சாமி அவர்கள் சீர்திருத்த மணத்தின் அவசிய மென்பதுபற்றியும், திருவாளர் T. P. இராமர் அவர்கள் காலத்துக்குத் தக்கவாறு சீர்திருத்தம் அவசிய மென்பதுபற்றியும், திருவாளர் R. அழகிரிசுப்பு அவர்கள் பெண்கல்வி என்பது பற்றியும் சொற்பொழிவாற்றிய பின் தலைவர் முடிவுரையாக பெண்கள் முன்னேற்றம் என்பதுபற்றிப் பேசி கடைசியாக மணமக்களை மணமார வாழ்த்துவதாகக் கூறி யுட்கார்ந்தார். பிறகு சந்தனம் தாம்பூலம் வழங்கிய பின்னர் சபையோருக்கு வந்தனமும் மணமக்களுக்கு வாழ்த்துங் கூறப்பட்டன. மாலை 6 மணிக்குத் திருமணம் இனிது நிறைவேறியது.

---

புதிதாக 'கிராப்' செய்ய வெண்ணி பார்பர் ஷாப்புக்குச் சென்ற ஒரு நாட்டுப்புறத்தான்:— ஐயா! எனக்கு தலைமயிர் வெட்டிக் கொள்ள சார்ஜ் எவ்வளவு?

பார்ப்பர்:— ஆறணு;

நாட்டுப்புறத்தான்:— ஆறணுவா? எவ்வளவு அதிகம். (சிறிது நேரம் யோசித்துவிட்டு) வெட்டிய மயிரை நீரே எடுத்துக் கொள்ளுவீரா? என்னிடமே திருப்பிக் கொடுத்து விடுவீரா?



# பர்மா நாட்டுக்கோட்டையார்கள் சங்கம்.

4-ம் பக்கத் தொடர்ச்சி

களை யெல்லாம் குறைத்து விடுகிறது. இதனால் அனேக கடைகள் கெட்டுப்போய் விடும். வெளிநாட்டைச் சேர்ந்தவர்கள் இந்தியாவில் குடியிருப்பவர்களானால் அவர்கள் ஒருவருஷத்தில் கொண்டுவருகிற தொகை இந்நாட்டிற்குக் கொண்டு வரப்பட்டால் அது எத்தனை வருஷத்து லாபமாக இருந்தாலும் அவ்வளவுக்கும் வரி விதிக்கப்படுமென்று இம்மசோதா கூறுகிறது. (இம்மசோதாவின் கொள்கை வெளிநாட்டில் பணத்தைப் போட்டுவைப்பதைத் தடுத்து உள்நாட்டிலேயே இருக்கச் செய்யவேண்டு மென்று) கொள்கைகளில் ஸ்டேட்மெண்டு 3-வது பிரிவில் சொல்லப்பட்டிருக்கும் நோக்கத்திற்கு இது முற்றும் விரோதமானது. வெளிநாட்டின் பணத்தை இங்கே கொண்டுவராமல் தடுப்பது மிகவும் பொருந்தாத யோசனையாகும். இவ்விதமான பெரும் மாறுதல்களைத் தீரவிசாரியாமல் அவசரமாகக்கொண்டுவந்து நிறைவேறி விடும்படி விட்டுவிடக் கூடாது. சட்டசபையில் ஒத்துக்கொண்டால் 1930ஞு எப்ரல் மாதம் முதற் தேதியிலிருந்து அமுலிற்குக் கொண்டுவரவேண்டுமென்று ரங்காச்சாரியார் கேட்ட கேள்விக்குப் பொக்கிஷ மெம்பர் பதிலளித்ததானது மிக திடுக்கிடச் செய்யும்படியான யோசனையாகும். பளுவான வரிகளை வசூல்செய்ய முடியாதென்பதை கவர்ன்மெண்டார் மறந்து விடுகிறார்கள். சொத்துக்களின் விலை மதிப்புக்குறைந்தும் கொடுத்த கடன்கள் வசூலாகா திருக்கும் பொழுதும் வரி விதிக்கப்படுவோர் வரிக்காக எங்ஙனம் பணம் சேகரிக்க முடியும். சிலோன் வருமான வரிச்சட்டம் வரிவிதிக்கப் படுவோரின் பணம்கட்டும கஷ்டங்களையும் கவர்ன்மெண்டார் வசூலிக்கும் கஷ்டங்களையும் உத்தேசித்தே நிறுத்தி வைக்கப்பட்டது. தற்சமயத்தில் விதிக்கப்பட்டிருக்கும் பளுவான வரி விகிதங்களோடுகூட, மேற்கொண்டு வெளிநாட்டிலிருந்து வரும் வருமானத்திற்கும் வரி விதிப்பதானது பொது ஜனங்களுடைய கஷ்டத்தைக் கவனியாது கொடுமை செய்தாகும். ஆகையால இம்மசோதாவை விட்டுவிடும்படி கேட்டுக் கொள்கிறோம். இல்லாவிட்டாலும் இதை மேற்கொண்டு யோசிப்பதற்கு முன்னாலே பொதுஜன அபிப்பிராயத்திற்கு அனுப்புவது முக்கியமாகும் என்று ராமசாமி செட்டியார், காரியதரிசி, நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் சங்கம்,"

அவ்விதமே சென்ற கூட்டத்தில் இதனைச் சட்டமாக்காது பொதுஜன அபிப்பிராயத்திற்கு அனுப்புவதென்று தீர்மானிக்கப் பெற்றிருக்கிறது. இது சம்பந்தமாய் ஜே. கே. முன்ஷியவர்கள் நமக்குக் கீழ்க்கண்ட தந்தியை அனுப்பியிருந்தார்:—

"அவசியமானதும் செய்யப்பட்டிருக்கிறது. வருமான வரி மசோதா பொதுஜன அபிப்பிராயத்திற்காக அனுப்பட்டிருக்கிறது."

நாம் கொடுத்திருந்ததைப் போன்ற தந்தியொன்று சென்னை நாட்டுக்கோட்டை செட்டியார்கள் சங்கத்திலிருந்தும் அனுப்பப் பெற்றிருந்தது.

### வருமான வரி வசூலித்தல்.

தோஞ்சை நகரத்தாரவர்கள் கேட்டுக் கொண்டதற்கிணங்க பிப்ரவரி மாதத்தில் வருமானவரிக் கமிஷனர்க்கு நாம் எழுதியிருந்த கடிதத்தில் இதற்குமுன் என்றும் கண்டிராதவாறு வியாபார மந்தமும் சிறப்பாக அரிசிவிலை இறங்கிவிட்டதனால் பர்மாவின் க்ஷேமம் குறைந்து பணமார்க்கெட்டானது எப்பொழுதும் பிரியமாய் இருப்பதாகவும் அதிலும் தாராவாடி ஜில்லாவில் ஏற்பட்டிருக்கும் கலகத்தினால் அப்பக்கத்தில் உள்ள வியாபாரங்களெல்லாம் கெட்டுப்போயிருப்பதாகவும் ஆதலால் எல்லா வருமான வரி உத்தியோகஸ்தர்களுக்கும் சிறப்பாக தாராவாடி, ஜில்லா உத்தியோகஸ்தர்களுக்கும் சொல்லி வருமான வரியைக் கட்டுவதற்குப் போதுமான காலம் கொடுக்கும்படியும் பர்மா மாகாண வங்கி விசாரணைக் கமிட்டியார் சிபார்சு செய்திருப்பதுபோல வரித்தொகைகளை இரண்டு மூன்று தவணைகளாக வசூலிக்க வேண்டுமென்றும் கேட்டுக்கொண்டோம்.

அதற்கு வருமான வரிக் கமிஷனரவர்கள் அளித்திருந்த பதிலில் அவ்விதம் பணம் கட்டுவதற்கு அதிக காலம் வேண்டுமென்று விரும்பும் செட்டியார்கள் அந்தந்த வருமானவரி ஆபீசரைக் கேட்டுக் கொள்ள வேண்டுமென்றும் அவர் ஒவ்வொருவர் நிலையும் கவனித்து நடந்து கொள்வாரென்றும் வருட முடிவிற்குள் அந்தந்த வருஷத்து வரியை வசூலித்து விடுவது மிகவும் விரும்பத் தக்கதென்றும் வருமான வரிக்காக எதிர்பார்க்கப் படுவதாகவும் சொல்லியிருந்தார்.

### சேவாப் பத்திரத்திற்கு எட்டணு ஸ்டாம்பு தேவைதானு?

தற்சமயத்தில் சேவாப் பத்திரங்களுக்கெல்லாம் அரை ரூபாய் ஸ்டாம்பு ஒட்டி வருகிறார்கள். அவ்வித ஸ்டாம்பு ஒட்ட வேண்டியது அவசியமில்லை யென்ற பிரச்சினையை மூப்பின செட்டி நாட்டு பாங்கியின் மானேஜர் நாச்சியப்ப செட்டியாரவர்கள் எழுதியிருந்தார்கள். அதன்பேரில் இரங்கூனில் உள்ள இரண்டு பெரிய வக்கீல்களிடத்தில் அபிப்பிராயங்கேட்டு வாங்கினோம். ஸ்டாம்பு சட்டத்தின் 35 A விதியின் பிரகாரம் சேவாப் பத்திரத்தில் 1 வருட காலத்திற்கு மேற்படாமல் காலவரை கண்டிருந்தாலும் அல்லது சராசரி வருடக்குத்தகை 100 ரூபாய்க்கு மேற்படாமலிருந்தாலும விவசாய காரியங்களுக்காக விவசாயிகளிடம் எழுதிவாங்கும் சேவாப் பத்திரங்களுக்கு ஸ்டாம்புத் தீர்வை கிடையாது. இதில் முக்கியமாகக் கவனிக்க வேண்டியது எவ்விதமான லாபமும் அபாரதமும் கொடுக்கப் பட்டிருக்கக் கூடாது. பர்மாவில் எழுதிவாங்கும் பத்திரங்களெல்லாம் ஒருவருட குத்தகையே கண்டிருப்பதாலும் சலாமி அபாரதம் முதலியன வாங்கும் வழக்கமில்லை யாதலாலும் ஒருவருடத்து நிலச்சேவாப் பத்திரத்திற்கு ஸ்டாம்பு வேண்டியதில்லை. என்றாலும் தெருவில் விற்கப்படும் சேவாப்பத்திரங்களில், சேவாப் பத்திரத்தில் கண்டிருக்க வேண்டாத சில விதிகளெல்லாம் எழுதப்பட்டிருக்கிறது. நாம் அபிப்பிராயம் கேட்டிருந்த இருவக்கீல்களில் ஒருவர் அவ்வித பத்திரங்களின் ஷரத்துக்கள் எப்படியிருந்தாலும் அதன் முக்கிய நோக்கம் சேவாப் பத்திரமே யாகையினால் ஸ்டாம்பு வேண்டா மென்று சொல்லியிருந்தார். மற்றொரு வக்கீல் இக்கருத்தை ஒப்புக்கொண்டார். ஆனாலும் சேவாப் பத்திரங்களில் இதர ஷரத்துக்கள் இருப்பதால் எக்ரிமெண்டுகளுக்கு ஒட்டுகிற எட்டணு ஸ்டாம்பு ஒட்டுவது உசிதமென்று அபிப்பிராயப்பட்டார். ஆதலால், சரியான சேவாப் பத்திரங்கள் தயாரிக்கப் பெறுகிறவரையில் எட்டணு ஸ்டாம்பு ஒட்ட வேண்டாமென்று நாங்கள் சொல்லக்கூடவில்லை. சங்கத்திலேயே ஸ்டாம்புகள் ஒட்டவேண்டியிராதவிதமாக சேவாப்பத்திரங்கள் தயார் செய்ய உத்தேசித்துள்ளோம். அது சம்பந்தமாய் பலரைக் கலந்துகொள்ள வேண்டியதிருப்பதால் சங்கத்திலிருந்து வெளிவர கொஞ்சகாலம் செல்லும்.

### செக்கியூரிட்டி மார்க்கீசும் பவர் மார்க்கீசும்.

பெப்ரவரி மாதத்தில் பைனன்ஸ்அண்டு ரெவினியு டிபார்டுமெண்டு காரியதரிசிக்கு சங்கத்திலிருந்து எழுதப்பெற்ற கடிதத்தில் பர்மா பாங்கிங் என்குயரி கமிட்டி யாதாஸ்தின் 272 வது பாராவில் பவர்மார்க்கீசு செய்யும் உரிமையை பக்கோ ஐராவதி டிவிஷன்கள் பூராவும் அக்கியாப் ஜில்லாவிலும் மாந்தலேயிலும் அமுலிற்குக் கொண்டு வருவதற்காக கவர்னர் ஜெனரலவர்கள் உத்திரவு பிறப்பிக்க வேண்டுமென்று சொல்லியிருப்பதையும், 748 வது பாராவில் செக்கியூரிட்டி மார்க்கீசு போடும் உரிமையைப் பக்கோ ஐராவதி டிவிஷன்களில் உள்ள எல்லா ரிஜிஸ்திரேஷன் சப் டிஸ்டிரிகட்டு தலைமையாபீஸ்களுக்கு ஆரம்பத்தில் தரவேண்டுமென்று சிபார்சு செய்திருப்பதையும் அவர் கவனத்திற்குக் கொண்டுவரப் பெற்றதுடன், பர்மா கவர்ன்மெண்டார் கவர்னர் ஜெனராலுக்குத் தெரிவித்து இச்சிபார்சுகளை அமுலிற்குக் கொண்டு வரும்படிக் கேட்டுக்கொண்டிருக்கிறோம்.

அதற்குக் கிடைத்த பதிலில், பர்மா சர்க்காரின் ரெவினியு டிபார்ட்டுமெண்டு காரியதரிசி நம்முடைய கடிதத்தின் நகலொன்றை இந்தியன் செண்டிரல் பாங்கிங் என்குயரி கமிட்டியின் ஆலோசனைக்கு அனுப்பி யிருப்பதாகவும் மத்திய கமிட்டியின் ரிப்போர்ட்டு வெளியாவதற்கு முன்பாக பர்மா மாகாண பாங்கிங் என்குயரி கமிட்டியின் சிபார்சுகளின் பேரில் நடவடிக்கை எடுத்துக்கொள்வது சரியானதாகா தென்றும் எழுதியிருந்தார்கள்.

### ஆர். ஈ. டி., டெலிபோன் கம்பெனிக் கடிதங்கள்.

பெப்ரவரி மாதத்தில் ரெங்கூன் டெலிபோன் கம்பெனி ஜனரல் மானேஜர்க்கும் ரெங்கூன் எலக்டிரிக் டிராம்வே சப்ளைஸ் அன் கம்பெனி ஜெனரல் மானேஜருக்கும வியாபாரம் மந்தமாக இருப்பதாலும்எல்லா சாமான்களின் விலை கீழே இறங்கியிருப்பதாலும் முறையே டெலிபோன் கருவி விகிதத்தையும் மின்சார விகிதத்தையும் குறைக்க வேண்டுமென்று கடிதம் எழுதியிருந்தோம், ரங்கூன் எலக்டிக் டிராம்வே சப்ளை கம்பெனியிலிருந்து நமக்குக் கிடைத்த பதிலில் மின்சார விகிதங்களைக் குறைப்பதைப்பற்றி கம்பெனியின் டைரக்டர்களால் ஆலோசிக்கப் பெற்றதாகவும் நம்முடைய கோரிக்கைகளில் அவர்கள் அனுதாப முள்ளவர்களாக இருப்பதாகவும் பொதுஜனங்களுக்கு வியாபார மந்தத்தினால் ஏற்பட்டுள்ள கஷ்டங்கள் அவர்களையும் அதிகமாய்ப் பாதிப்பதாகவும், இருந்தாலும் தங்களுடைய விகிதங்களை யெல்லாம் மாற்ற வேண்டுமென்று விரும்புவதாகவும் அது ஒரு சிரமமான பிரச்சினையாதலால் அதை நிச்சயிப்பதற்குக் கொஞ்சகாலம் செல்லுமென்றும் எழுதியிருந்தார்கள்.

ரெங்கூன் டெலிபோன் கம்பெனி எழுதியிருந்த பதிலில் நம்முடைய கடிதத்தை போர்டு மீட்டிங்கில் ஆலோசித்ததாகவும் தற்சமயத்தில் வாங்கப்படும் 300 ரூபாய் விகிதமானது மிக நியாயமான தென்றும் இந்தியாவின் இதர பட்டணங்களில் வாங்குவதை விட இது சௌகர்யமா யிருக்கிறதென்றும் கவர்ன்மெண்ட் ஆப் இந்தியாவுக்கும் கம்பெனிக்கும் உள்ள ஒப்பந்தப் பிரகாரம் 350 ரூபாய் வாங்கலாம் என்றிருந்தாலும் தற்காலம் உள்ள 300 ரூபாய்க்கு மேல் அவர்கள் வாங்கவே யில்லை யென்றும் இதரர்களைப் போல இந்தக் கம்பெனியும் உலக வியாபார மந்தத்தால் பாதிக்கப்பட் டிருக்கிற தென்றும் ஆதலால் கடைமுறை விகிதங்களைக் குறைப்பதற் கில்லையென்று எழுதியிருந்தார்கள்.

### ஐக்கியசபை வருடக்கூட்டம்.

Federation of Indian Chambers of Commerce and Industry யின் வருடக் கூட்டம் டில்லியில் எப்ரல்மாதம் 7, 8, 9உ களில் நடைபெற்றது. மகாத்மா காந்திஜி அவர்கள் கூட்டத்தைத் திறந்துவைத்தார்கள். விவசாயம், கைத்தொழில்கள், வெள்ளி, கர்ரென்ஸி எக்ஸ்ஸேஞ்சு, இன்ஷியூரென்ஸ் இன்னோரன்ன விஷயங்கள் சம்பந்தமாய் பன்னிரண்டு தீர்மானங்கள் நிறைவேறின. அவைகளில் பர்மாவின் அரசியலைக்குறித்த தீர்மானமும் ஒன்றாகும். அத்தீர்மானம் பின்வருமாறு:—

"பர்மாவின் அரசியல் சம்பந்தமான பிரச்சினையை பர்மா ஜனங்களுடைய தீர்மானத்திற்கு விட்டுவிட வேண்டுமென ஐக்கியசபை அபிப்பிராயப்படுகிறது. வட்டமேஜை மகாநாட்டுத் தீர்மானத்திலும், குடியேற்ற நாட்டந்தஸ்து இல்லாமல பிரிவினை ஏற்படுத்துவதென காமன்ஸ் சபையில் ஜனவரி மாதம் 20உ யன்று இந்தியா மந்திரி அவர்கள் கொடுத்த ஸ்டேட்மெண்டிலும் பொறுப்புள்ள பர்மியர்கள் அதிருப்திகொண்டிருக்கிறார்கள் என்பதற்குப் போதுமான அறிகுறிகளிருக்கின்றன. இந்திய சுதேச சமஸ்தானங்களையும் மாகாணங்களையும் சேர்த்து ஐக்கிய கவர்ன்மெண்டாக ஏற்படுத்த உத்தேசித்திருப்பதானது ஒரு நூதன நிலையை உண்டாக்கியிருக்கிறதென்றும், அவ்வித ஐக்கிய கவர்ன்மெண்டில் பர்மா சேர்ந்துகொள்வது அதிக நன்மை பயக்குமென்று ஐக்கிய சபை அபிப்பிராயப்படுகிறது. ஆதலால் இவ்விஷயமாய் பர்மாவின் ஜனங்கள் சுதந்தரமாய், தெளிவாய்த் தங்கள் அபிப்பிராயத்தைத் தெரிவிப்பதற்கு பூரணமாய், சரியான சௌகரியங்கள் அளிக்க வேண்டுமெனவும், தற்சமயம் அமுலிலுள்ள அடக்குமுறைச் சட்டங்களினால் அவ்விதஞ் செய்வது மிகவும் கஷ்டமா யிருக்கிற தென்றும் இவ்வைக்கிய சபை வற்புறுத்திச் சொல்ல விரும்புகிறது."

இக்கூட்டத்திற்குத் திருவாளர் சா. ராம. மு. சித. மு. சிதம்பரஞ் செட்டியார் அவர்கள் நமது சங்கத்தின் பிரதிநிதியாகச் சென்றிருந்தார்கள், பல அவசரமான வேலைகட்கிடையே இக்கூட்டத்திற்குச் சென்று வந்தமைக்கு அன்னார்க்கு நமது வந்தனம் உரியதாகுக.

### சர்வதேச வியாபார மகாநாடு.

அமெரிக்கா தேசத்து வாஷிங்டன் மாநகரில் சர்வதேசத்து வியாபார மகாநாடு இம் மேமாதம் முதல்வாரத்தில் நடைபெற்றது, இம்மகாநாடு பாரிஸ் நகரின்கண்சர்வதேசத்து வியாபாரசங்கத்தாரால்கூட்டப்பெற்றது. இக்கூட்டத்திற்கு திருவாளர்களான அ. மு. மு. முருகப்பச் செட்டியாரவர்களும், வெ. வீர. சுப்பையா செட்டியாரவர்களும் நம் சங்கப் பிரதிநிதிகளாகச் சென்றுள்ளார்கள். இவ்விருவர்களும் சிலோன், மலாய் நாடுகள், ஜப்பான் முதலிய நாடுகளைச் சுற்றிப் பார்த்துவிட்டு அமெரிக்கா சென்றார்கள். அங்கிருந்து இங்கிலாந்து முதலிய ஐரோப்பிய நாடுகளிலும் சுற்றுப்பிரயாணம் செய்து வருவார்களென அறிகிறோம். அவ்விருவர்களின் ஊக்கத்திற்கு நமது வந்தனம் உரியதாகுக. முன் அறிவித்திருந்தபடி திருவாளர் சா. அ. அ. அண்ணாமலைச் செட்டியாரவர்கள் அக்கூட்டத்திற்குச் செல்லக்கூடவில்லை.

### நிலக்கரி தேவையாளர்கட்கு.

இந்தியர்களுக்குச் சொந்தமானதும் இந்தியர்களால் நிர்வகிக்கப்பட்டு வருகிறதுமான சுரங்கங்களிலிருந்து தங்களுக்குத் தேவையான நிலக்கரியை வாங்கும்படி கல்கத்தாவிலுள்ள இந்தியன் மைமனிங் பெடரேஷன் சங்கத்தார் கேட்டுக்கொள்கிறார்கள்.

### கலங்கரை விளக்குகளின் மத்திய ஆலோசனைக் கமிட்டி.

மேடி மத்தியக் கமிட்டியில் ஐக்கிய சபையின் சார்பாக அங்கத்தினர்களாக விருந்த மூவர்களின் உத்தியோக காலம் 1931 ஆம் வருஷம் மார்ச்சு மாதத்தோடு முடிவதால் புதிதாக மூவரைத் தேர்ந்தெடுக்கும்படி ஐக்கிய சபையை இந்தியா கவர்ன்மெண்டார். கேட்டிருந்தார்கள். நாம் ஸ்ரீமான்கள் எஸ். என். ஹாஜீ, எம். ஏ. மாஸ்டர், வி. கோபால் மேனன் ஆகிய மூவரையும் தேர்ந்தெடுக்கும்படி ஐக்கிய சபைக்கு ஆலோசனை கூறியிருந்தோம் இம் மூவர்க்கே பெரும்பாலான ஓட்டுகள் கிடைத்தமையால் அவர்கள் ஐக்கிய சங்கத்தின் பிரதிநிதிகளாகத் தெரிந்தெடுக்கப் பெற்றிருக்கிறார்கள்.

(தொடரும்)

# வருஷத்துக்கு 13 மாதம்.

## ஆங்கிலப்பஞ்சாங்கத்தில் சிலமாறுதல்கள்.

உலக முழுவதிலுமே ஆச்சரியப்படத்தக்க மாறுதல்கள் பல உண்டாகி வருகின்றன. அவைகளில் முதன்மையானது 1934-ஹு ஜனவரி-மீ 1-ந் தேதி முதல் ஆரம்பிப்பதாக உத்தேசித்திருக்கும் ஆங்கிலப்பஞ்சாங்க மாறுதலேயாகும்.

நவீன வியாபார, சமூகப் போக்குக்குத் தக்கபடி ஒரு புதிய வருஷ, மாத, வார ஏற்பாடு செய்து வருகின்றனர். இந்த முறை எல்லா தேசங்களிலும் ஒரே மாதிரியாயிருக்க வேண்டுமென்று பிரயத்தினம் நடந்து வருகிறது. சமீபத்தில் இது விஷயமாகக் கலந்து யோசிக்கும் பொருட்டு சர்வதேச சங்க மெம்பர்களில் நிபுணர்களின்கூட்டமொன்று ஜினீவாவில்கூடும்.

இப்புதிய முறையைப்பற்றி 1934-ஹு ஜனவரி மாதத்துக்குள் எல்லா நாடுகளின் பார்லிமெண்டுகளும் சம்மதத்தைத் தெரிவிக்கப் போதிய சாவகாசமிருப்பதாக மேற்படி கமிட்டி கூறுகிறது.

### புதிய மாதம்.

இப்புதிய திட்டப்படி ஒவ்வொரு மாதமும் 28 நாட்களடங்கியதாகும். வருஷத்துக்கு 13 மாதங்களுண்டு. ஆகையால் இப்போதுள்ளதற்கு மேல் ஒரு புதிய மாதம் சேர்க்கப்பட வேண்டியிருக்கிறது. அதன் பெயர் "சால்" என்று வைக்கப்படலாமென்றும், ஜூன் மாதத்துக்கும் ஜூலை மாதத்துக்கும் இடையில் வைக்கப்படலாமென்றும் சிபார்சு செய்யப்பட்டிருக்கிறது. இதன்படி ஒவ்வொரு கிழமைக்கும் ஒவ்வொரு மாதத்திலும் அதே தேதியேயிருக்கும். விவரம் அடியிற் கண்டபடி:—

| | | | | |
|---|---|---|---|---|
| ஞாயிறு. | 1 | 8 | 15 | 22 |
| திங்கள். | 2 | 9 | 16 | 23 |
| செவ்வாய். | 3 | 10 | 17 | 24 |
| புதன் | 4 | 11 | 18 | 25 |
| வியாழன். | 5 | 12 | 19 | 26 |
| வெள்ளி. | 6 | 13 | 20 | 27 |
| சனி. | 7 | 14 | 21 | 28 |

1934-ம் வருஷத்திற்குப் பிறகு தேதியினால் கிழமையையும், கிழமையினால் தேதியையும் எளிதில் கண்டுபிடித்துவிட முடியும். மதசம்பந்தமான திருநாட்கள் குறிப்பிட்ட தேதிகளில் நடைபெறும். உதாரணமாக ஈஸ்டர் தினம் ஏப்ரல் 15-ந் தேதி ஞாயிற்றுக்கிழமையிலும், கிறிஸ்துமஸ் பண்டிகை டிசம்பர் 23-ந் தேதியான திங்கட்கிழமையிலும் வரும். பிராட்டஸ்டண்டு சர்ச்சுகளும் கிரீஸ்தேச மாதா கோவில்களும் கிருஸ்து மதத் திருநாட்களைத் தீர்மானிப்பதில் ஆதரவு காட்டி யிருக்கின்றனர். ரோமிலுள்ள சர்ச் அதிகாரிகளும் அவ்விதமே ஆதரிப்பார்களென்று நம்பப்படுகிறது.

### சர்வதேச விடுமுறை நாட்கள்.

புதிய வருஷத்தில் எல்லாத் தேசங்களுக்கும இரண்டு விடுமுறை நாட்களுண்டு. ஒவ்வொரு வருஷத்திலும் 365-வது நாள் டிசம்பருடன் சேர்க்கப்படமாட்டாது. அதற்கு "வருஷ தினம்" என்று பெயரிட்டு அன்று உலகமுழுவதும் விடுமுறை நாளாகக் கொண்டாட வேண்டியது. இதேமாதிரி லீப் வருஷங்களில் ஜூன் மாதக் கடைசியில் ஒருநாள் விடுமுறை உண்டு. அதற்குத் தேதி கிடையாது. அன்றையதினத்திற்கு 'லீப்நாள்' என்றபெயர்.

எல்லா தேசங்களிலுமுள்ள பிரபல வியாபாரிகள் பலர் இத் திட்டத்திற்கு ஆதரவளித்திருக்கின்றனர்.

மேற்படி மாறுதலைச் செய்வதற்கு சர்வதேச சங்கம் தீவிரமாய் முனைந்து நிற்கிறது. ஆகையால் 1934-ஹு ஜனவரி முதல் மேற்படி மாறுதலை ஏற்கத் தயாராயிருக்கவேண்டும்.



# இந்திய வர்த்தகம்.

## சுங்க இலாகா அறிக்கை.

### இறக்குமதியில் பெருங் குறைவு.

இந்த வருஷத்திய அதாவது 31-3-31ம் தேதியோடு முடிவாகும் வருஷத்திய அன்னிய நாட்டு வியாபாரப் புள்ளி விவரங்கள் இப்போது வெளிவந்திருக்கின்றன. சென்ற வருஷத்திய சம்பவங்களால் எவ்வளவு தூரம் ஏற்றுமதி இறக்குமதி பாதிக்கப்பட்டிருக்கிறதென்று தெளிவாய் விளங்குகிறது. குறிப்பாக இறக்குமதி எவ்வளவு தூரம் பாதிக்கப்பட்டிருக்கிறதென்பது தெளிவாகத் தெரிகிறது. சென்ற வருஷத்திய புள்ளி விவரங்களை ஒப்பிட்டுப் பார்த்தால் அந்நிய நாட்டு வியாபாரம் எவ்வளவு தூரம் குறைந்திருக்கிறதென்றும், இறக்குமதிபுள்ளி விவரங்களிலிருந்து பகிஷ்காரம் எவ்வளவு தூரம் வெற்றி பெற்றிருக்கிறதென்றும் தெளிவாய்த் தெரிகிறது. அரசியல் நிலைமை ஒருபுறமிருக்க 1929-30 வருஷத்தில் பொதுவாகப் பொருட் கஷ்டம் இருந்துவந்தது. ஆனால் சென்ற வருஷத்தில் இறக்குமதி குறைந்திருப்பதுபோல இதற்கு முன் இரு வருஷங்களிலும் குறைவாயிருக்கவில்லை. 1928-29 வருஷத்தில் நாற்காலி மேஜை வகையரு தட்டுமுட்டுச் சாமான்கள், 60,68,253 ரூபாய்க்கு இறக்குமதியானது. 1929-30-ம் வருஷம் 63,17,002 ரூபாய்க்கும். இந்த வருஷம் 40,78,882 ரூபாய்க்கும் இறக்குமதியாகியிருக்கிறது. இந்தக் குறைவுமிக அதிகமானதே. இக்குறைவிற்குக் காரணம் பகிஷ்காரம்தானென்று கூறவேண்டும். சர்க்காருக்காக இறக்குமதியான சாமான்கள் தவிர 1928-29ம் வருஷத்தில் 253,30,59,74 ரூபாய்க்கும், 1929-30ம் வருஷத்தில் 240,79,69.341 ரூபாய்க்கும் 1930ம் வருஷத்தில் 164,82,54,520 ரூபாய்க்கும் சாமான்கள் இறக்குமதியாயிருக்கின்றன. இந்த வருஷக் குறைவிற்குக் காரணம் பகிஷ்கார இயக்கமேயாகும். ஒரு வருஷத்தில் 75 கோடி ரூபாய் இறக்குமதி குறைந்திருக்கிறது.

### நூல் ஜவுளி.

நூல் ஜவுளி வகையறாவில் சென்ற 3 வருஷங்களாக முறையே 63,24,36,749 ரூபாய்க்கும் 59,48,73.128 ரூபாய்க்கும் 25,2542.996ரூபாய்க்கும் இறக்குமதியாகியிருக்கிறது. 2 வருஷங்களுக்குள் 63 கோடியிலிருந்து 25 கோடிக்கு தொகை இறங்கிவிட்டது. இந்தக்குறை காரணமாக இந்திய இயக்கத்தைப்பற்றி லங்காஷயரில் மனக்கொதிப்பு ஏற்பட்டிருக்கிறது. பருத்தித்துணி இறக்குமதி மட்டுமன்றி எல்லா வகைத்துணி இறக்குமதியும் மிகமிகக் குறைந்திருக்கிறது. இதற்குக் காரணம் பகிஷ்காரம் மட்டுமன்று கதர் நாளுக்கு நாள் ஏராளமாய் உற்பத்தியாகி வருகிறது. அன்றியும் ஜனங்கள் மிக விலையுயர்ந்த ஆடைகளையணியும்வழக்கத்தை விட்டுவிட்டார்களென்று சொல்லலாம். இந்த இரண்டு காரணங்களாலே தான் துணி இறக்குமதி குறைந்தது. இதினின்று அதாவது இறக்குமதி குறைவினால் ஏற்படக்கூடிய மிகுதிப்பணத்தைக் கொண்டு இந்தியத்தறிகளில் செலவு செய்தார்களெனக் கொள்ளுவதற்கில்லை. அப்பணத்தைக் கொண்டு இந்தியத்தறிகளை விருத்தி செய்திருந்தால் இன்றுள்ள நிலைமையைவிட இந்தியா மிக மேன்மையான நிலைமையில் இருக்கும். இறக்குமதிக் குறைவினால் இந்தியத் தறிகள்சிறிது முன்னேறினவேனும், பகிஷ்காரந்தவிர வேறெந்தக் காரணங்கள் இறக்குமதியைக் குறைத்தனவோ, அதே காரணங்கள்தான் இந்தியத்தறி நஷ்டத்திற்குக் காரணங்களாயிருக்கின்றன.

### உணவு, குடி, புகையிலை வகையறா

சென்ற 3-வருஷங்களாக உணவு, குடி, புகையிலை வகையறாவில் மட்டும் முறையே 46 கோடி. 40 கோடி, 29 கோடிக்கு இறக்குமதியாகியிருக்கிறது. விளை பொருட்களும் செய் பொருட்களும் இறக்குமதி மிக அதிகமாகி விடவில்லை. சென்ற 3வருஷங்களாக முறையே 2252 லட்சம் 2330 லட்சம் 2277 லட்சம் ரூபாய்க்கு இறக்குமதியாகியிருக்கிறது. மருந்துவகைகளில் சென்ற 3 வருஷங்களாக முறையே 4,9150,108 ரூபாயும், 5,49,99,167 ரூபாயும் 4.89,23,599 ரூபாயும், பெறுமான அளவு இறக்குமதியாயிருக்கிறது. இதினின்று பிரிட்டிஷ் மருந்துகள் பகிஷ்காரம் வெற்றிபெறவில்லை என்பது விளக்கம். சென்ற 3 வருஷங்களாக 436 லட்சத்திற்கும், 399 லட்சத்திற்கும், 382 லட்சத்திற்கும் முறையே சாய இறக்குமதியானது. மின்சாரச் சாமான்களின் இறக்குமதி முன்போலவே இருந்துவருகிறது. 1928-29 முதல் 1930-31 வருஷம் முடிய அதே விகிதப்படி இறக்குமதியாகிவருகிறது. மண் சாமான்கள், கண்ணாடிச்சாமான்கள் இறக்குமதியில் குறைவேற்பட்டிருக்கிறது. சென்ற வருஷங்களாக 3,11,22,975 ரூபாய்க்கும் 3.24,88,098 ரூபாய்க்கும் 213,64,145 ரூபாய்க்கும் இறக்குமதியாகியிருக்கிறது. இந்தியாவில் கண்ணாடித்தொழில் நடைபெறுகிறது. கண்ணாடி இறக்குமதி, குறைவதனால் இத்தொழில் இந்தியாவில் பலப்படவேண்டும். சென்ற 3 வருஷங்களாக முறையே 19 கோடி ரூபாய்க்கும் 15 கோடி ரூபாய்க்கும், 15 கோடி ரூபாய்க்கும், இறக்குமதியாகியிருக்கிறது. காகிதம், அட்டை, பேனா, பென்சில் வகையறா 431 லட்சம், 477 லட்சம். 367 லட்சம் ரூபாய்க்கு சென்ற 3 வருஷங்களில் முறையே இறக்குமதியாகி யிருக்கிறது. ரப்பர் சாமான்கள் சென்ற 3 வருஷங்களில் முறையே 286 லட்சம், 330 லட்சம் 257 லட்சத்திற்கு இறக்குமதி யாயிருக்கிறது. வண்டிகள் 11 கோடிக்கும் 10 கோடியே 84 லட்சத்திற்கும், 7 கோடியே 30 லட்சத்திற்கும் முறையே சென்ற 3 வருஷங்களில் இறக்குமதியாயிருகின்றன. மிருகங்கள் முக்கியமாகக் குதிரைகள் சென்ற 3 வருஷங்களில் முறையே 35 லட்சம், 32 லட்சம் 21 லட்சம் ரூபாய்க்கு இறக்குமதியாகி யிருக்கிறது. இதிலிருந்து ஒவ்வொரு சாமான் இறக்குமதியும் மிகக் குறைந்திருக்கிறதெனத் தெரிகிறது.

ஏற்றுமதியைப்பற்றியோ வென்றால் சென்ற வருஷத்திய ஏற்றுமதி அவ்வளவு திருப்திகரமாயில்லை. சென்ற 3 வருஷங்களாக விளைபொருள்கள் ஏற்றுமதி முறையே 70 கோடிக்கும், 156 கோடிக்கும், 10 கோடிக்கும் நடைபெற்றிருக்கிறது. செய்பொருள்கள் 89 கோடிக்கும் 84 கோடிக்கும், 54 கோடிக்கும் முறையே ஏற்றுமதியாகியிருக்கிறது. எனவே, ஏற்றுமதி வியாபாரம் அவ்வளவு ஊக்கமளிக்கத்தக்கதாயில்லை. இது இயற்கையே. நாம் முன்மாதிரி அன்னிய நாடுகளிலிருந்து சாமான்கள் தருவிப்பதில்லையென்றால், அந்நாட்டாரும் நம் நாட்டினரிடமிருந்து சாமான்கள் தருவிக்கமாட்டார்களல்லவா? வியாபாரக் குறைவிற்குக் காரணமென்ன? அதன் பலனென்ன வென்பதுபற்றி நாம் ஆராயப் புகுமுன் ஒன்று மட்டும் திண்ணமாய்க் கூறலாம். வியாபாரம் குறைந்துவிட்டதென்றால், வியாபார வாயிலாகப் பிழைத்து வந்த அநேகக் குடும்பங்கள் வேலையின்றித் திண்டாடுகின்றன என்பது பொருந்தும். இதிலிருந்து வியாபாரக் குறைவினால் மக்களனைவரும் பெரிதும் பாதிக்கப்படுகிறார்களென்பது உண்மை. ஆனால் ஒருவழியுண்டு. இறக்குமதிக் குறைவினால் மகுதியாகும் தொகையைக் கொண்டு பலவகைக் கைத்தொழிற் சாலைகள் நிறுவி, நம் நாட்டினின்று பிற நாடுகளுக்கு ஏற்றுமதியாகும் விளை பொருட்களைக் குறைத்து தொழிற் சாலைகளின் உதவியால் விளைபொருட்களைச் செய் பொருட்களாக மாற்றி ஏற்றுமதி செய்யலாம். இதனால் விளை பொருள் ஏற்றுமதி குறைந்து செய் பொருள் ஏற்றுமதி அதிகப்படுகிறது. சுதேசக் கைத்தொழில்கள் பெருகி மக்களுக்குள்ள வேலையில்லாத் திண்டாட்டம் நீங்கி சுகமாக வாழ்வார்கள்.

"இந்தியன் டெக்ஸ்டைல் ஜர்னல்"

# 1931-ல் சிங்கப்பூர் ஜனத்தொகை.

## சிங்கப்பூர் முனிசிபல் எல்லைக்குள் பட்ட ஜனத் தொகை.

| | ஆண். | பெண். | மொத்தம். |
|---|---|---|---|
| ஐரோப்பியர் | 4186 | 2398 | 6584 |
| யூரேஷியர் | 2880 | 3163 | 6043 |
| மலாய்க்காரர் | 23523 | 19901 | 43424 |
| சீனர் | 214730 | 125915 | 340645 |
| இந்தியர் | 35239 | 6609 | 41848 |
| மற்றவர்கள் | 4081 | 3 153 | 6234 |
| | 284639 | 161139 | 445778 |

### ஆண் பெண் சராசரிவிகிதம்.

ஒவ்வொரு ஆயிரம் ஆண்களுக்குள்ள பெண்களின் விகிதம்.

| | |
|---|---|
| ஐரோப்பியர் | 573 |
| யூரேஷியர் | 1099 |
| மலாய்க்காரர் | 846 |
| சீனர் | 586 |
| இந்தியர் | 188 |
| மற்றவர்கள் | 772 |

சிங்கப்பூரைச் சேர்ந்த கிராமங்களிலுள்ள மொத்த ஜனத்தொகை:—

| | | | |
|---|---|---|---|
| ஐரோப்பியர் | 1173 | 389 | 1562 |
| யூரேஷியர் | 449 | 434 | 883 |
| மலாய்க்காரர் | 11390 | 10154 | 21544 |
| சீனர் | 46276 | 31681 | 77947 |
| இந்தியர் | 8034 | 1542 | 9576 |
| மற்றவர்கள் | 286 | 226 | 512 |
| | 67608 | 45416 | 112024 |

### ஆண் பெண் சராசரி விகிதம்

ஒவ்வொரு ஆயிரம் ஆண்களுக்குள்ள பெண்களின் விகிதம்.

| | |
|---|---|
| ஐரோப்பியர் | 332 |
| யூரேஷியர் | 967 |
| மலாய்க்காரர் | 891 |
| சீனர் | 684 |
| இந்தியர் | 192 |
| மற்றவர்கள் | 790 |

1921 வருடத்து சென்செஸ்படி சிங்கப்பூர் முனிசிபல் எல்லைக்குள்ளும் அதைச் சார்ந்த கிராமங்களிலுமுள்ள மொத்த ஜனத் தொகை. 418358.

# மலாய் நாட்டில் தீர்வை உயர்வு.

கீழ்கண்டவிவரப்படி ஐக்ய மலாய் நாட்டில் ஜூன் மீ 1உ முதல் தீர்வை உயர்த்தப்பட்டிருக்கிறதென அறிவிக்கப்பட்டிருக்கிறது.

| | அதிகப்படியான தீர்வை. |
|---|---|
| சாராயம் பிராந்தி | |
| விஸ்கி ஜின் | $ 3-00 கேலனுக்கு |
| ஜப்பான் சீன சம்சு | $ 2-00 ,, |
| பீர் ஸ்டவுட் முதலியன | $ 0-20 காசு |
| மண்ணெண்ணெய் | $ 0-05 கேலனுக்கு |
| பெட்ரோல் | $ 0-10 ,, |
| சுருட்டு, பொடி | $ 0-10பவுண்டுக்கு |
| சிகரெட் | $ 0-10 ,, |
| புகையிலை | $ 0-10 ,, |
| சக்கரை | $ 0-02 ,, |
| நெருப்புப் பெட்டி | $ 0-20 ,, |

இந்த தீர்வை உயர்வினால் வருடத்திற்கு $ 5,00,0000 வருமானம் அதிகப்படுமென எதிர்பார்க்கப்படுகிறது.

## தாதுபுஷ்டியில் மன்மதனுக்குழப்பாவீர்கள்.

நீங்கள் என்றுமழியாத இளமைப்பருவத்தை அடைய வேண்டுமானல் பழனி, ஆர். எம். கே.

# தங்கபஸ்பம்

## நரசிங்க லேகியத்தில் சாப்பிடுங்கள்.

தாதுபுஷ்டிக்கு இதற்கு நிகரான மருந்து ஒன்றுமே இல்லை.

இது பிரபுக்கள் சாப்பிடவேண்டிய மருந்து. மற்றவர்கள் சாப்பிட்டு தாங்கமுடியாது.

ஒரே வேளையில் கொடுக்கும் பலனைப் பார்த்தால் உங்கள் மனதை அப்படியே கவரச்செய்துவிடுகிறது

தாதுபுஷ்டியில் மன்மதனேவென மயங்குவார்கள்.

இதிலமைந்திருக்கும் ஓர் ரகசியம் அபூர்வசக்தி உபயோகித்தவர்களுக்குத்தான் தெரியும்.

இதை காலை மாலை நோய் பலம்போல் 1 அல்லது 2 மண்டலம் உட்கொண்டால் வெகு சிக்கிரத்தில் தாதைக் கட்டி விரியத்தையும் பலத்தையும் கொடுத்து இழந்துபோன ஆண்மைத்தனம் முழுமையும் திரும்பி வரும்படி செய்கிறது. இக்குணம் இதிலமைந்திருப்பது மகா ஆச்சரியமாயிருக்கிறது. இப்படியும் ஒரு மருந்துண்டாவென்று பிரமிக்கச்செய்கிறது. தாதைக்கட்டி இல்வாழ்க்கையில் இன்பத்தைக்கொடுத்து பால்யம், யௌவனம், விருத்தாப்பியம் இந்தப் பருவங்களில் அடையவேண்டிய காலத்திற்கு முன் அடைந்த விபரிதங்களை நிவர்த்தி செய்யும். கிழத்தனத்தை நீக்கி வல்லமை யடையச் செய்வதில்பேர்பெற்றது. நீரழிவு, பிளவை, குன்மம், காசம், க்ஷயம், ஈளை, இருமல்கஷ்டசுவாசம், கோளை, கபக்கட்டு, கிரந்தி முதலிய சகலவித கர்ம வியாதிகளும் தீரும். தளர்ந்துபோன நரம்புகளுக்கு முறுக்கேற்றும், வீரியத்தைக் கெட்டிப்படுத்தி ஆண்மைக் குறைவை நீக்கி தாதுபுஷ்டியை உண்டாக்குவதில் இதற்குமிஞ்சின ஔஷதமில்லை. 100-நாளைக்கு தங்கபஸ்பமும் நரசிங்க லேகியமும் ரூ. 100. 50 நாளைக்கு ரூபாய் 50. 25 நாளைக்கு ரூபாய் 25. சிங்கப்பூர் வாசிகள் சார்ஜு ரூபா 2-ம் சேர்த்து முன் பணம் அனுப்பவேண்டும்.

### நற்சாக்ஷி.

நான் உட்லேண்டு ஸ்டேஷன்மாஸ்டர் மூலமாய் தங்களிடமிருந்து நரசிங்க லேகியமும், தங்க பஸ்பமும் சாப்பிட்டதில் இப்போது புதிய பலம் அடைந்திருக்கிறேன்.

S. Jesudasan. Railway Overseer, Woodlands, Singapore

### புத்திரசந்தானம் உண்டாகிவிட்டது.

நற்சாக்ஷி:—எனக்கு விவாகம் நடந்து ஆறு வருடம் வரை புத்திர சந்தானமில்லாமலிருந்தது. தங்கள் தங்க பஸ்பமும் நரசிங்க லேகியமும் தருவித்து 25-நாட்கள் சாப்பிட்டதில் என் குறைகள் பூராவும் தீர்ந்து புத்திர சந்தானமுண்டாகிவிட்டது. இந்த உண்மையை உலகத்தாருக்கு எடுத்தோதமுன்வந்திருக்கிறேன். இம்மருந்துகள் தத்வ ஔஷதங்கள் என்று சொல்லுவது மிகையாகாது. சரீர திடத்தையோ, புத்திக்கூர்மையோ, மனமகிழ்ச்சியையோ, மேலாய புத்திரப்பேற்றையோ விரும்பும் ஒவ்வொருவரும் இம்மருந்துகளை வாங்கி சாப்பிட்டால் நினைத்தது லபிக்குமென்பதே எமது துணிபு. தாங்கள் நீண்ட ஆயுளைப் பெற்று வாழ எல்லாம் வல்ல பிரான் இன்னருள் புரிவாராக.

(Sd) நல்லதம்பி, கட்டுப்பட்டை, சிலோன். 22—2—27.

### ஒரு அஸிஸ்டெண்ட் ஸர்ஜன்.

1—9—24-ல் கோலாசெலங்கூர் டிஸ்டிரிக்ட் ஹாஸ்பிட்டல் அஸிஸ்டெண்ட் ஸர்ஜன் நமது தங்க பஸ்பத்தைப்பற்றிப் புகழ்வதைக் கவனியுங்கள்:—அன்பார்ந்த வைத்திய ஆசிரியர் ஆர். எம். கே. வேலுசாமிபிள்ளை அவர்களுக்கு அதிக பக்தியுடன் எழுதுவது யாதெனில், தங்க பஸ்பமும், நரசிங்கலேகியமும் இரு நோயாளருக்கு 50-நாட்களுக்கு கொடுக்கப்பட்டது. இருவரும் தங்கள் குறைகள் நீங்கி சவுக்கியத்துடனிருக்கிறார்கள். தாங்கள் அருமையாகச்செய்த பஸ்பமும் லேகியமும் யாவராலும் கொண்டாடத்தக்கதே. இன்னும் 100-நாள் தங்க பஸ்பமும் சாலாமிசிரி அல்வாவும் ரூ. 50-க்கு வி. பி. செய்யவும்.

Nagalingam, Hospital C/o District Hospital Kualaselangore

# தாதுபுஷ்டிக்கு

## தங்க பஸ்பம் மகாமன்மத காமகேசரி சாலாமிசிரி அல்வா.

இழந்துபோன ஆண்மையைத் திரும்பக் கொடுக்கும் இல்லற வாழ்க்கையில் இன்பத்தைக் கொடுத்து தாதுபுஷ்டியை உண்டாக்குவதில் இதற்கு மிஞ்சின ஔஷதமில்லை.

மேகரோகம் கொடிய வியாதி இல்லாதவர்கள் தாதுபுஷ்டி சரீர திடம், அடைய தங்க பஸ்பத்தையும் அனுபானம் மகாமன்மத காமகேசரி அல்வாவில் சாப்பிடவும், காமகேசரி அல்வாவும் தங்க பஸ்பமும் 100-நாள் மருந்து ரூபாய் 50. 50-நாளைக்கு ரூபாய் 25. 25-நாளைக்கு ரூ. 12—8—0

## கிருஷ்ணலீலா காமகேசரி குளிகை.

தாதுபுஷ்டிக்கு இதற்கீடு ஒன்றுமில்லை,

பிரபுக்களுக்கு 100-குளிகை ரூ. 20. மற்றவர்களுக்கு 100-குளிகை ரூ. 10.

### ஒரு அஸிஸ்டெண்ட்ஸர்ஜன் புகழ்வதைக் கவனியுங்கள்.

தங்களின் அருமையும் பெருமையுமான தங்க பஸ்பமும் சாலாமிசிரி லேகியமும் எனது நோயாளி ஒருவருக்குக்கொடுத்தேன், அவரின் எத்தனையோ விதமான நோய்கள் பஞ்சுபோல் பறந்துபோய்விட்டது. இப்போது அவர் நல்ல திடதேகியாயிருக்கிறார். ஆகையால் அடியிற்கண்ட மருந்துகளை அனுப்பவும். தாம்பர பஸ்பம் 80-வேளை ரூ. 40. தாளிச பத்திரி சூரணம் 40-வேளை ரூ 5. நரசிங்க லேகியம் தங்கபஸ்பம் ரூ. 50. தபால் செலவு ரூ. 2. ஆக ரூ. 97-க்கு வி. பி. செய்யவும்.

19—1—25

மகா-ள-ள-ஸ்ரீ வைத்திய ஆசிரியரவர்களுக்கு, தங்கள் மருந்துகள் யாவும் நோயாளர் யாபேருக்கும் சுகத்தையும் மனத்திருப்தியையும் கொடுத்திருக்கின்றது. தங்கள் மருந்துகளின் அருமையையும் நான் அநேகருக்கு அனுபோக அத்தாக்ஷியுடன் எடுத்துக்காட்டியிருக்கிறேன். தங்கள் மருந்துகளுக்கு சர்டிபிகேட் தேவையில்லை. மருந்துகள் தாமே தங்கள் பெயரை எங்கும் விளங்கச் செய்கின்றது. ஆகையால் தாம்பர பஸ்பம், நரசிங்க லேகியம், பவள பஸ்பம், தங்க பஸ்பம் இவைகளை வி. பி. செய்யவும் (ரூ. 238-0-0-க்கு) வி. பி. பார்சலில் அனுப்பியிருக்கிறது.

P. Nagalingam C/o District Hospital,
Kualaselengore

### நற்சாக்ஷி:

புத்திரசந்தானம் உண்டாகிவிட்டது,

ஐயா, எனது நண்பர்களில் ஒருவர் ஆண் தத்துவம் சிறிதுமின்றி மனவருத்தத்துடனிருந்தார். அநேக வைத்தியர்களால் கொடுக்கப்பட்ட பல மேல்பூச்சு மருந்துகள் உபயோகித்தும், அநேக மருந்துகள் சாப்பிட்டும் கொஞ்சம்கூட குணமாகவில்லை. தங்கள் மேன்மை பொருந்தியதும், உயர்ந்த பலனைக் கொடுக்கக்கூடியதும், மதிக்கமுடியாததுமான தங்க பஸ்பம், மகாமன்மத காமகேசரி சாலாமிசிரி அல்வா 50-நாள் மருந்தும், கிருஷ்ணலீலா காமகேசரி குளிகை 100-ம் தருவித்து 15-நாள் சாப்பிட்டதில் பெருமை பாராட்டத்தக்க புதிய சக்தியையும் 10 மடங்கு ஆண்மையையும் கொடுத்துவிட்டது. ஷை வியாதியஸ்தர் பூரா மருந்தையும் சாப்பிட்டதில் தனது இழந்துபோன ஆண்மைத்தனம் பூருவையும் பெற்றுவிட்டார். இப்பொழுது ஒரு ஆண் குழந்தையை அடைந்திருக்கிறார். தங்கள் ஞாபகசின்னமாக ஷை குழந்தைக்கு "வேலுசாமி" என்கிற தங்கள் நாமத்தையே சூட்டி அழைத்து வருகிறார்.

10-1-29 NATANAM, Sub-Inspector of Police,
South Arcot Dt.

வைத்திய ஆசிரியர்:

## ஆர். எம். கே. வேலுசாமிபிள்ளை,

சித்த வைத்தியசாலை பழனி. S. I. RY.

தந்தி விலாசம்: 'வேலுசாமி' பழனி.

Printed and Published by S. MURUGAPPA (Editor) for Dhana vysian Company Ltd., at the Kumaran Power Press, Karaikudi.

